



| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு கஉஅக, ஆடி | பரல் |
|---|---|---|
| ௩௨ | ஆகஃச்டு, 1958 | க௨ |


# செந்தமிழ்ச் செல்வியின் தொண்டு

நம் அருமைத் தமிழ் மொழிக்கண் செம்மையுற வெளிவரும் வெளியீடுகள் சில. அவற்றுள்ளும் செந்தமிழ் மொழி வளம் பொதுள வந்து கொண்டிருக்கும் வெளியீடுகள் மிகச் சில. அவற்றுள்ளும் நாடும் மொழியும், நன்னெறியும் பீடுறத்தாங்கி வரும் வெளியீடுகள் நனிமிகச் சிலவாம். அவற்றுள் நம்செந் தமிழ்ச் செல்வியும் ஒன்று. நம் செல்வி கடந்த முப்பத்திரண்டு யாண்டுகளாக மேற்குறித்த மூன்றற்கும் ஒல்லும் வகை ஒவாது தொண்டாற்றிவருகின்ற உண்மை உலகறிந்த வொன்றே. மேலும் உயர்ந்த இலக்கிய நடையில் திகழ்வதும் இதுவே யாகும். தனித் தமிழ் மாண்பினைத் தொடக்கமுதல் தொடர்ந்து ஓம்பி வருவதும் இதுவே. தமிழ் மொழியின் தலைமையினை உற்றுழி யெல்லாம் முன்வந்து நிலைநாட்டப் பேருதவியாவதும் இதுவே. பண்டைத் தமிழ் நூற்கள் பல இறந்துபடாது சிறந்து நிலைக்க வேண்டுங் குறிப்புக்களும் கட்டுரைகளும் அவ்வப்போது வரைந்து துணை புரிந்து வருவதும் இதுவே.

இதன்கண் செந்தமிழ்ப் புலவர்கள் பலரின் பயனுர் வரலாறுகள் வந்துள்ளன. அவரவர்களின் நிழலுருவங்களும், அவரவர்கள் யாத்துள்ள நூல்களும் அவரவர் வரலாறுகளுடன் இணைக்கப்பட்டுள்ளன. இவைகள் வரலாற்று ஆசிரியர்களுக்குப் பெருந்துணை புரிவன. பண்டைப் பெரும் புலவர்கள் பலருக் கிணையாக இஞ்ஞான்று புகழுடன் வாழ்ந்து மறைந்த பல்லோர்க் கும் பாராட்டுப் புரிதலுடன் சிலருக்கு நினைவு மலரும் வெளி யிடத் தூண்டி வேண்டுவன செய்து வருகிறது. இலக்கண இலக் கியத்துறைகளிலும், ஆராய்ச்சித் துறைகளிலும், வரலாற்று

முறைகளிலும், சமயத்துறைகளிலும் இன்றி யமையாது உணர்ந்து ஒழுகவேண்டிய பல நல்ல கட்டுரைகள் அவ்வத்துறை களில் அறிவும் ஆற்றலும், பயிற்சியும் மிக்க பல ஆன்றோர்களால் வரையப்பட்டு அவ்வப்போது வெளியிட்டு வருகிறது.

நம் தாய்மொழியாம் அருந்தமிழின் தொன்மை நன்மைச் சிறப்புக்களைத் தக்க சான்றுகளுடன் நடுநிலையாளர்கள் அனை வர்களும் மறக்காது ஒப்புக்கொள்ளுமாறு வெளியிட்டு வரு கிறது. பள்ளிக்கூடம், கல்லூரி, ஆட்சித்துறை, வணிகத்துறை அலுவலகம், மனைவாழ்க்கை, பொது வாழ்க்கை, அவைக்களம், திருமடம், திருக்கோவில் முதலிய எல்லா இடங்களிலும் நம் தாய்மொழியாம் செந்தமிழுக்கே முதன்மையும் உரிமையும் வழங்குதல் வேண்டுமென வற்புறுத்துக் காரண காரியத் தொடர் புடன் கூறும் கட்டுரைகள் பல தாங்கிவருகின்றது. மரஞ் செடி கொடிகளின் ஆராய்ச்சிகள் இஞ்ஞான்றை அறிவியலுக் கேற்பப் பண்டை நூல் வழக்காறுகளுடன் வெளிவருகின்றது. உலகியற் செய்திகளில் மிக முதன்மை வாய்ந்ததும் வரலாற்றுக்குப் பெருந் துணை புரிவதும ஆகிய பல செய்திகள் வருகின்றன.

பண்டைத் தமிழின் மாண்பினை யறியாது அம்மொழியின் கண் அயன்மொழிச் சொற்களை வரை துறையின்றி வேண்டு மென்றே புகுத்தி அம்மொழியினைச் சிதைத்து அம்மை வார்த்த முகம்போல் ஆக்கிவிடவேண்டுமென்று மடிதற்று முன்னின்று சில்லோர் வெளிப்பட்டும் மறைந்திருந்தும் செய்து போந்தனர். அந் நாளில் தமிழின் தூய்மையும் மாண்பும், தனித்தியங்கும் ஆற்றலும், இயற்கைச் சிறப்பும், இனிமையும், எளிமையும் இவை இவையென விளக்கமுறக் காட்டி நிலைநாட்டிய ஆண்மைச் சான் றோர் நம் மறைமலை யடிகளாராவர். அவர்கள் தம் அரும்பெரும் நூற்களின் ஆங்காங்கே விரவிப் பொதுளிய பல அருந்தொடர் கள் கற்பார்க்குக் கழிபேருவகையும், இன்பமும், உறுதியும் பயக்கும் ஒண்மைத் தொடர்களா யமைந்துள்ளன. அவைகளை "மறைமலை யடிகளார் மணிமொழிகள்" எனத் தலைப்பமைத்தும் அதுபோன்று அடிகளார் எழுதிய கடிதங்கள் பலவற்றையும் தனித்தலைப்பமைத்துச் சேர்த்தும் வெளியிட்டு வருகின்றது. இத்தகைய பல நற்பொருள்கள் தாங்கி இவ்விதழுடன் இவ் வாண்டு நிறைவுறுகின்றது. அன்பர்கள் நம் செல்வியை வாழ்த்தி யூக்கிப் பெரிதும் போற்றித் துணைபுரியுமாறு வேண்டிக் கொள் கின்றோம். இவ்வாண்டில் வெளிவந்துள்ள கட்டுரைகள், கட்டுரை யாசிரியர்கள் முதலிய பெயர்கள் முகப்பில் வரையப்பட்டுள்ளன என்பதையும் நினைப்பூட்டுகின்றோம்.

---

# குறிஞ்சித்திணை

[திரு. பி. எல். சாமி, பி. எஸ்ஸி]

அகமும் புறமும் கலந்ததே மனித வாழ்க்கை என்று பழந் தமிழர் கருதினர். அகவாழ்க்கையைக் கூடத் தமிழன் என்றும் வெறுந்தன்னல வாழ்க்கையாகக் கருதவில்லை. தன்னலமாகக் கருதியிருப்பின் முதலில் 'தான், தனது' எனும் உளக்கோட் டங்களை வேரறுப்பதே மனித வாழ்க்கையின் குறிக்கோள் என்று கருதியிருப்பான். அத்தகைய வாழ்க்கையில் புறத்திற் கிடமின்று. தமிழன் சிறந்ததாகக் கருதிய அகத்திற்குமிடமின்று. பழந் தமிழர், வாழ்க்கை வாழ்வதற்கே என்று கருதினர். அதில் தனது உள்ளத்திற்கிடமுண்டு. தான் வாழும் நிலத்திற்கும் காலத்திற்குமிடமுண்டு. தன்னைச் சுற்றி வாழும் செடி கொடி களுக்கும் உயிரினங்களுக்கும் அதில் இடமுண்டு. அதனால் தான் அகத்திணையில் முதல், கரு, உரிப்பொருள் என்று பாகு படுத்திக் காட்டினான். தான் வாழும் நிலத்தையோ, நிகழும் பொழுதையோ நிற்கும் செடியையோ நில்லா விலங்கையோ எதையுமே தன்னுடைய அகவாழ்க்கைக்குப் புறமாகக் கருத வில்லை. தன்னைச் சுற்றியுள்ள, சூழ்ந்துள்ள நிலப் பொருளையும் இயங்கு பொருளையும் உள்ளத்துடன் இணைத்த வாழ்வையே பிணைத்த வாழ்க்கை முறையையே பழந்தமிழன் 'திணை' என்று கூறினான். அறிஞர் இராதா கிருஷ்ணன் அவர்கள் அகமும் அக மற்றதும் கொள்ளும் தொடர்பே வாழ்க்கை என்று ஓரிடத்தில் கூறுகிறார். ஆனால் தமிழர் அகமெனக் கூறியது வெறுந் தன் னலமன்று. தன்னலத்தில் முளைத்துத் துணைநலமாக முகிழ்த்துப் பிறர் நலமாக மலர்வது. அன்புடை நெஞ்சந் தாங்கலந்து மக் களைப் பெற்றுச் சுற்றந் தழுவிப் பிறர் நலம்பேணி 'சிறந்தது பயிற் றலே' தமிழனது குறிக்கோள். அக வாழ்க்கையில் முதற் பொருள், கருப்பொருள், உரிப்பொருள் பாகுபாடு மிக நுண் ணியதாகும். முதல், கருப்பொருட்கள் இயற்கையும் செயற் கையுமான சூழ்நிலையைக் (Environment) குறிக்கின்றது அச் சூழ்நிலையில் ஊடாடும்போது - தொடர்புறும்போது மாறும் உள்ளப் பாங்கையே உரிப்பொருள் குறிக்கின்றது.

திணைகளில் முதல்திணை குறிஞ்சி யென்பர். கூடுவதே அக வாழ்க்கையில் முதற்கட்ட மாதலால் குறிஞ்சியே முதல்திணையா யிற்று. வரலாற்று அடிப்படையில் பார்க்குங்கால் மலைகளிலும் காடுகளிலும் தேனும் கிழங்கும் பழமும் தேடி உண்டு வாழ்ந்த

வாழ்க்கையே மனிதனின் முதல் வாழ்க்கை யாதலால் குறிஞ்சித் திணையே முதல்திணையாகக் கருதப்பட்டது. மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சியென்பர். ஆயின் இவ்விடத்திற்கு இப்பெயர் எதனால் வந்ததெனின் மலையில் வாழும் ஒரு செடியின் பூவினால் வந்த தென்பர். பல செடிகள் வாழும் மலைக்கு ஒரு செடியின் பெயர் இடுவது ஏன் என்றால் விடை தேடித்தான் பிடிக்க வேண்டும். அப்பொழுதுதான் நமக்கு அறிவியல் துணை செய்கின்றது. அறிவியல் துணைகொண்டு ஆராயுங்கால் பழந்தமிழரின் நுண்மாணுழைபுலமும், இயற்கை ஈடுபாட்டாராய்ச்சியும் வெளியாகின்றது.

கடல் மட்டத்திற்குமேல் ஆறாயிரம் அடிக்கு மேற்பட்டே இயற்கையில் காணக் கூடிய செடி குறிஞ்சிச் செடியாகும். பிற செடிகளுக்கு அத்தகைய கட்டாய வரையறை இச் செடிக்கிருப்பதுபோல் கிடையாது. ஆறாயிரம் அடிக்கு மேற்பட்ட நிலம் மலையும் மலைசார்ந்த பகுதியாகத் தான் இருக்கும். இத்தன்மையின் அடிப்படைக் காரணத்தாலேயே மலையும் மலைசார்ந்த இடத்தை இச் செடியின் பெயரால் அழைத்தனர். இதற்கு மற்றொரு காரணமும் உண்டு. அது இச் செடியின் பூவின் தனித்தன்மையாகும். இச் செடியின் பூ ஒன்பது ஆண்டுக்கொரு முறை தோன்றிப் பன்னிரண்டு ஆண்டுகள் வரை தொடர்ந்து காணப்படுகின்றது. இயற்கையில் இத்தகைய வியப்பிற்குரிய பூ வேறின்மையால் மலையிலும் மலை சார்ந்த இடத்தில் காணப்படும் இந்தப் பூவின் பெயராலே இந்த இடத்தை அழைத்தனர். செடி நூலில் இச் செடி ஸ்ட்ரோபிலான்தஸ் (Strobilanthes) என்ற இனத்தைச் சார்ந்தது. தமிழ் நாட்டிலும் ஈழத்திலும் மத்திய இந்தியாவிலும் காணப்படுகின்றது. நீலகிரி மலையிலும் பழனி மலையிலும், கோடைக்கானல் மலையிலும் பல ஆண்டுகளாக இச் செடி பூக்கும் காலத்தைக் கண்டு எழுதிவைத்திருக்கின்றனர். இவை மலைச்சாரல்களில் பூக்குங்கால் பல்லாயிரக் கணக்கான பூக்கள் ஒரே கூட்டமாகத் தென்படும். ஒன்பதாவது ஆண்டிலிருந்து பன்னிரண்டாவது ஆண்டுவரை மலைச்சாரல்களில் கூட்டம் கூட்டமாக இச் செடிப் புதர்கள் பூத்துக் கிடக்கும். பன்னிரண்டாம ஆண்டில் செடிகள் இறந்து விடுகின்றன. இப்படிக் கூட்டம் கூட்டமாகப் பார்த்ததால் தான் பழந்தமிழ்ப் புலவர் 'கருங்கோற் குறிஞ்சி யடுக்கம்' என்று கூறினர். இந்தப்பூவில் நிறையத் தேனுண்டு. தேன்மிக வுடையதாக அறிஞர்கள் கூறும் பூக்களில் இதுவுமொன்று. பல்லாயிரக் கணக்கான பூக்கள் ஒரு குறிப்பிட்ட காலத்தில் தோன்றுவதால் தேன்மலிந்து போய் விடுகின்றது. அதனால் தேனீக்கள் மலைச்சாரல்களில் பெரிய

பெரிய தேன் கூடுகளை நிறையக் கட்டுகின்றன. இச் செடி பூக்கத் துவங்கியதும் தேன் கூடுகள் மலைச் சாரல்களில் மலிந்து விடுகின்றன. இதைக் கண்டே சங்கப் புலவரொருவர்,

"கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தே னிழைக்கும் நாடனொடு நட்பே"

என்று பாடினர். குறிஞ்சிப் பூவின்தேனை மிக இனியதெனக் கருதினர்.

"கருங்காற் குறிஞ்சி மதனில வான்பூ
நாறு கொள் பிரச மூறுநா டற்கு"

என்ற நற்றிணைப் பாடலில் குறிஞ்சித் தேனின் இனிமை கூறப்பட்டிருக்கின்றது. குறிஞ்சிப் பூவின் தேனை மிக வுயரியதாகக் கருதியதற்கு இன்னொரு காரணமும் உண்டு. பொதுவாகத் தேன் கூடுகளில் பலவகைப் பூக்களின் தேன் காணப்படும். ஆனால் குறிஞ்சிப் பூக்களின் தேனால் இழைக்கப்படும் கூட்டில் பிற பூக்களின் தேன் கலப்பதில்லை. ஏனெனில் குறிஞ்சிச் செடி பூக்க ஆரம்பித்தால் தேனீக்கள் குறிஞ்சித் தேனையே கூடுகளில் சேர்க்கின்றன. இத்தகைய தேனை "தனிப்பூத்தேன்" (unifloral honey) என்று அறிஞர்கள் அழைக்கின்றனர். இப்பொழுது சவ்வாது மலையில் சந்தனப் பூத்தேன் சேர்க்கச் சென்னை அரசியலார் ஒரு தேன் ஆராய்ச்சிப் பண்ணையை நிறுவியிருக்கின்றனர். இந்தத் தனிப்பூத்தேன் மணத்திற்கும் இனிப்புக்கும் பெயர் பெற்றது. பூக்கும் காலத்துக் குறிஞ்சித்தேன் நிறைந்து விடுகின்றது. இனிமை மிகுந்தது. நறுமணம் வாய்ந்தது. பல்லாண்டுக் கொருமுறை அரிதாகக் கிடைக்கின்றது. அது போன்றே நாடனுடைய நட்பும் திடீரென்று தோன்றுகின்றது. பெருகுகின்றது. இனிமை மிகுந்து நறுமண மெய்துகின்றது. அது மட்டுமா, குறிஞ்சிக்குப் பன்னிரண்டு ஆண்டுக் கொருமுறை மறுபிறப்பு இருப்பதுவும் சாரலில் தேனிழைப்பதுவும் போல் வரும்பிறப்பிலெல்லாம் நாடனுடன் நட்புத் தொடர்கின்றது. இத்தகைய அரிய, பெரிய, இனிமையான, மணமான தேனைத் தருவதாலும் மலையும் மலைசார்ந்த இடத்தையும் குறிஞ்சி என்ற பெயரால் அழைத்தனரென்று தெரிகின்றது.

குறிஞ்சித் தேனின் அருமை பெருமைகளைத் தமிழர் மட்டுமன்றிப் பழங்குடி மக்களும் அறிந்திருக்கின்றனரென்று தெரிய வருகின்றது. டாக்டர் வெரியர் எல்வின் (Dr. Verrrier Elwin) என்ற அறிஞர் பழங்குடி மக்களைப் பற்றிப் பல ஆராய்ச்சிகளை வெளியிட்டிருக்கின்றார். சூடுநாகபுரியில் வாழும் பைகர்கள் (Baiga) என்ற இனத்தாரைப் பற்றியும் எழுதியுள்ளார். அவர் சொல்வதாவது: "குறிஞ்சிப் பூக்கள் கூட்டம் கூட்டமாகப்

பூக்கும். ஒன்பதாண்டுக் கொருமுறை பூக்கும். அப்பொழுது பைகர்கள் தேனீ விழாக் கொண்டாடுவர். விழா முடிவு நாளில் மலைத்தேனைச் சடங்குகளுடன் நடனத்துடன் உண்பர்.'' இச் செடியை இம் மக்கள் "மோகடே, ஆமோரா'' என்று அழைப்ப தாகக் கூறுகிறார். பைகர்கள் இச் செடியில் ஆண் பெண் வேற் றுமை கூடப் பார்க்கின்றார்களாம். இச் செடியைப் பற்றிச் சில புராணக் கதைகள் கூட இவர்களிடையே வழங்குகின்றனவாம். தேனீவிழாக் காலத்தில் கூடை கூடையாக குறிஞ்சித்தே னடை களைச் சேகரித்துக்கொண்டுவந்து ஆடவரும் பெண்டிரும் தீயைச் சுற்றி நடனமாடுவார்களாம். குறிஞ்சிச் செடிகளைத் தலையிலும் இடுப்பிலும் செருகி ஆடுவார்களாம். நடு இந்தியாவில் வாழும் பழங்குடி மக்கள், அதுவும் திராவிடப் பழங்குடி மக்கள் குறிஞ்சித் தேனைப் போற்றுவதைக் காணுங்கால் அவர் களுக்கும் பழந் தமிழருக்கும் மிகப் பழங்காலத்தில் தொடர் பிருந்திருக்கவேண்டு மென்றே தோன்றுகின்றது. நீலகிரியில் தோடர்கள் தங்கள் குழந்தைகளின் வயதைக் குறிஞ்சிச் செடி பூப்பதைக் கொண்டே கணக்கிட்டனராம். ஒருவேளை மிகப் பழந்தமிழரும் பன்னீராட்டை அகவையினனை 'ஒரு குறிஞ்சி அகவையினன்' இருப்பத்துநான்காட்டை அகவையினனை 'இரு குறிஞ்சி அகவையினன்' என்று கூறினரோ என்று எண்ணவு மிட முண்டு. பழந்தமிழர் வேங்கை மரம் பூப்பதைக் கண்டு ஆண்டு களைக் கணக்கிட்டன ரென்பது தெரிந்த செய்தியாகும். குறிஞ் சிச்செடி எப்படிப் பழங்குடி மக்களையும் பழந் தமிழரையும் கவர்ந் ததோ அது போலவே நீலகிரியிலும் கோடைக்கானலிலும் வாழ்ந்த வெளி நாட்டாரின் கவனத்தையும் ஈர்த்திருக்கின்றது. இரண்டு நூற்றாண்டுகளாக இதைப் பற்றிய நாட்குறிப்பும் (Diaries) எழுதியுள்ளனர். இச் செடியின் பூவைப் படம் வரைந் தும் பாடம் செய்தும் வைத்திருக்கின்றனர்.

குறிஞ்சிச் செடியில் பல இனங்கள் உள்ளன. அதில் ஒரு இனம் (Strobilanthes wallichi) பன்னிரண்டு ஆண்டுகளுக் கொருமுறை மலருமாம். அது விளையும்போது பிற செடிகளை வளரவிடாது அழுத்திவிடுமாம். அதனால் மலைச்சாரலில் குறிஞ் சிச் செடியைத் தவிரப் பிற செடியைக் காணமுடியாதாம். இந்தச் செடி வளர்வதும் தனிப்பட்ட முறையாகும். ஆண்டு தோறும் இளவேனிலில் குருத்துத் தோன்றும். பல கணுக்கள் விட்டு வளரும் இக் குருத்து, ஆண்டிறுதியில் கீழ்க்கணுவைத் தவிர்த்து முழுவதும் அழிந்துவிடுமாம். இம்முறையில் ஒவ் வொரு ஆண்டும் கீழ்க்கணுவைவிட்டுப் பிற கணுக்கள் (Inter- nodes) அழிந்து போவதால் இச் செடியின் வயதைப் பழைய

கணுக்களின் எண்ணிக்கையைக்கொண்டு சொல்லிவிடலாம். ஒரு வேளை பழங்குடி மக்கள் இம்முறையாக எண்ணித்தான் வயதைக் கணக்கிட்டிருப்பாரோ என்று எண்ண இடமிருக்கின்றது. குறிஞ்சிச் செடியில் உஅ இனங்கள் ஈழத்தில் காணப்படுகின்றன. பர்மாவிலும் அசாமிலும் இவை காணப்படுகின்றன. ஆனால் தமிழ்நாட்டில் மட்டும்தான் அவை சிறப்புடையதாகக் காணப்படுகின்றன என்று செடிநூலறிஞர்கள் கருதுகின்றார்கள். ஏனெனில் வேறெங்கும் அவை செழிப்பாகவும் பெரியதாகவும் தமிழ்நாட்டில் வளர்வதுபோல் இருப்பதில்லை. குறிஞ்சி இனங்களில் பூக்களின் நிறம் மாறுபடுகின்றது. மிக அழகிய பூக்களையுடைய இனங்கள் பல ஆண்டுக்கொருமுறையே பூக்கின்றன என்று அறிஞர்கள் கூறுகின்றனர். அறிவியல் அறிஞர்கள் இச் செடியை 'மலைவாழ் புதர்ச்செடியென' (undergrowth of Montanic regions) வர்ணிக்கின்றனர். குறிஞ்சிப்பூவின் நிறங்களில் நீல நிறத்தையே தமிழர் போற்றினர். நீலக் குறிஞ்சிப் பூவையே நறுங்குறிஞ்சியாகக் கருதினர். அசாமில் வாழும் ஒரு வகை நீலநிறக் குறிஞ்சிப் பூக்களை நீலச்சாய மிறக்குவதற்காக அசாம் மக்கள் பயன்படுத்துகின்றனர். நீலகிரி என்ற பெயரே, நீலக் குறிஞ்சி வளர்வதால் வந்த பெயரோ என்று ஐயமுறவேண்டியிருக்கின்றது. ஏனெனில் ஒருசில இனங்கள் நீலகிரியில் மட்டும் காணப்படுவதாகச் செடிநூலறிஞர் கூறுகின்றனர். நீலகிரியின் கிழக்குச் சாரலில் இருஇனங்கள் (Strobilanthes Amabilis, Strobilanthes Kunthianus) வாழ்வதாகத் தெரிகின்றது. குறிஞ்சிப்பூவின் பல நிறங்களைத் தமிழர் நன்குக அறிந்திருந்தனரென்று கூறுவதுமிகையாகாது. "கருங்கோற் குறிஞ்சிப்பூ" என்று பல விடங்களில் இப்பூ வர்ணிக்கப்படுகின்றது. குறிஞ்சி அரும்பாயிருக்கும்போது வெண்மையாகக் காணப்படும். நற்றிணையும் "கருங்கோற் குறிஞ்சி மதனில வான்பூ" என்று கூறுகின்றது. குறிஞ்சித் திணையில் குறிஞ்சிப்பண் தோன்றியது. குறிஞ்சிப் பண்ணில் தோன்றும் இராகங்களைக் குறிஞ்சி இனப்பூக்களின் நிறத்தால் பெயரிட்டழைத்திருக்கின்றனர். மேகராகக் குறிஞ்சி என்பது ஓர் இராகம். இது மேகநிறம் போன்று (grey) உள்ள குறிஞ்சிப் பூவின் நிறத்தால் பெயர் பெற்றது. வியாழக் குறிஞ்சி என்ற இராகம் சிவந்த குறிஞ்சிப் பூவால் பெயர் பெற்றது. பிற்காலப் பாடலொன்று குறிஞ்சிப் பூவைக் குங்குமத்திற்கு ஒப்பிடுகின்றது. பொன்வண்ணக் குறிஞ்சி என்ற இராகம் மஞ்சள் நிறக் குறிஞ்சிப் பூவைக் குறித்திருக்கலாம் செடி நூலிலும் குறிஞ்சிப் பூக்கள் பல நிறங்களுடையன வென்று கூறப்பட்டிருக்கின்றது. பண்களுடனும் இராகங்களுடனும் நிறங்களை இணைத்துக் கூறுவது ஒரு நுண்ணிய அனுபவ உணர்ச்சியால்

எழுந்ததாகும் நீலாம்புரி என்ற இராகத்தின் பெயரில் நீலம் பயில்கின்றது. இம்முறையில் இயற்கை நிறங்களை இசையுடன் இணைத்துப் பார்க்கும் கொள்கை (Colour-music) மேலை நாட்டில் தோன்றியிருக்கின்றது. மேல்நாட்டு இசையில் பாச் (Bach) பித்தோவன், மோசார்ட் (Mozart) போன்ற பெரிய அறிஞர்களின் இசைப் பாடல்களைச் சில நிறங்களுடன் இணைத்துக் கூறுகின்றனர். இந்த நுண்ணிய உள்ளுணர்வு பழந் தமிழரின் இசையிலும் இருந்திருக்கின்றதென அறியும்போது வியப்படையாமல் இருக்க முடியாது. குறிஞ்சிச் செடி தற்பொழுது கோடைக் கானலில் பூக்கத்துவக்கியிருப்பதாகச் செய்தி வருகின்றது. ககூகO, ககூஉஉ, ககூநச, கூசசு-ஆகிய ஆண்டுகளில் பூத்ததாகத் தெரிகின்றது.

குறிஞ்சியின் கருப்பொருள் எவ்வளவு சிறப்புடையதோ அதுபோன்றே அதன் உரிப்பொருளும் சிறப்புடையது. காதலர் கூடுவது குறிஞ்சியின் உரிப்பொருள். மலைகளில் பெருங்காடுகள் இருப்பதால் காதலர் தனிமையில் காணவும் கூடவும் மலைச்சூழல் வாய்ப்பாக அமைந்திருக்கின்றது. முனிவரையும் மயங்க வைக்கும் சூழல் மலையும் மலைசார்ந்த இடத்தில் உளது. குறிஞ்சிப் பாட்டில் கபிலர் அழகிய செடி கொடிகள் அத்தனையும் காதலர் கூடுமிடத்தில் இருப்பதாகக் கூறியுள்ளார். இறையனார் அகப்பொருளிலும் பிற்கால இலக்கண இலக்கிய நூல்களிலும் செய்குன்று, இளமரக்கா முதலிய செயற்கைச் சூழல்களையும் உண்டு பண்ணி யிருக்கின்றனர். தனிப் பெருந் தலைவனும் தலைவியும் கூடுமிடம் தன்னேரில்லா அழகும் பெருமையும் உடையதாகக் கபிலர் படைத்திருக்கின்றார். "சந்தனமும் சண்பகமும், தேமாவும் தீம்பலவும், ஆசினியும் அசோகும், நறவும் நந்தியும், மாதவியும் மல்லிகையும் மௌவலோடு மணங்கமழ்ந்து, பாதிரியும் பாவை ஞாழலும் பைங் கொன்றையும் பிணியவிழ்ந்து, பொரிப்புன்கும் புன்னைகமும் முருக்மொடு முகை சிறந்து, வண்டறைந்து தேனார்ந்து வரிக்குயில்கள் இசை பாட, தண் தென்றல் இடைவிராய்த் தனியவரை முனிவு செய்யும் பொழில்" என்று இறையனாரகப்பொருள் வர்ணிக்கின்றது. இயற்கைச் செடிகள் மட்டுமா அங்குக் காணப்படுகின்றது! மாணிக்கச்சுனை, அதன் மருங்கே மாதவி மண்டபம், அருகே 'தகடுபடு பசும்பொற் சிகரங்களின் முகடுதொடுத்து' வீழும் அருவி, வரிக்குயில்கள் இசை பாடுகின்றன. இளமயில் ஆடுகின்றது. இத்தனையும் காதலர் கூடுமிடத்தில் காணப்படுகின்றன. இது பிரெஞ்சு இலக்கியத்தில் பாதலேர் (Bandalaire) என்ற அறிஞர் காணும் தன்னேரில்லாத இடத்தைப் போன்றே உள்

ளாது. இவ்விடத்து [1]எல்லாம் அழகு, எல்லாம் ஒழுங்கு அது மட்டுமா! எல்லாம் விழைவு (volupto)! மரஞ் செடிகள், குயில் மயில்கள் எல்லாம் பயந்துகொண்டு அங்குப்போய் அணிசெய்வ தாகத் தோற்றுகின்றது. செகப் பிரியர் நாடகத்தில் இனிமை யான காட்சிகளெல்லாம் 'ஆர்டன்' (Arden) காடுகளில்தான் நடைபெறுகின்றன. அழகும் அணியும் களிநடமாடு மிடம் மலையும் காடுமே. அச்சூழல் காதலர்களை வாவென்றழைக்கின்றது. முனிவரையும் கனிய வைக்கின்றது. விசுவாமித்திரர்கூடத் தவம் நழுவ, வழுவக்காரணம் வெறும் மேனகையல்ல; மலையும் காடும் கலந்த சூழலில் தோன்றிய மேனகையே, முனிவரைக் கனிய வைத்தாள். காதற் கதை எழுதுவதில் துறைபோகிய பிரெஞ்சு ஆசிரியர் மாப்பாசானின் (Maupassant) ஒருகதையில் ஒரு முதியவரும் அவர் மனைவியும் அறங்கூறவையத்திற்குக் கொண்டுவரப்படுகின்றனர். காட்டருகில் காதல் விளையாட்டுப் புரிந்ததாக அவர்கள்மேல் குற்றம் சுமத்தப்பட்டிருந்தது. அவைத் தலைவர் அவர்களை மன்னித்துவிட்டு, "குளிர் காலத்தில் காடுகள் முதியவரையும் வழுவச் செய்யும்" என்று கூறுகிறார். அதுபோன்றே பழந்தமிழரும் காதற்குரிய காலம் கூதிரென் றும் இடம் குறிஞ்சி யென்றும் கருதினர். முதியவர் மட்டு மன்றி முனிவரையும் வழுவச் செய்யும் என்றும் கருதினர். உளநூலறிவு (Psycology) டன் மிகப் பொருத்தமாகத் தமிழர் காலத்தையும் இடத்தையும் கூறியுள்ளனர். செகப் பிரியர்கூட [2]"காதல் நினைவுகள் வளர்ந்த சோலைகளில் மிகுந்து தோன்று கின்றன" என்று கஉ-ஆம் இரவு (Twelfth Night) என்ற நாட கத்தில் கூறுகின்றார்.

தமிழ்நூற்படி நள்ளிரவே காதலர் கூட்டத்திற் கேற்றது. ஏனெனில் நள்ளிரவில்தான் தடங்கல்கள் குறையும். நள்ளிரவில் தலைவன் வரும் காட்சியைப் பல சங்கப் பாடல்கள் படம் பிடித் தாற்போற் காட்டுகின்றன. நடு இரவில் காதலன் வருவான். அது பார்த்து வல்வாய் நாய்கள் குரைக்கும். கெடுமதி முகில் விட்டுத் திடுமென வெளிவரும். தண்கதிர் பாய்ச்சும் கூகை குழறும். ஆந்தை அலறும். முட்டாள் சேவலொன்று விடிந் ததோ எனக் கூவும். இயற்கையின் இரவுத்திருவிளையாடல்க ளெல்லாம் காதலனுக்குத் தாங்க முடியாத் தடங்கல்கள். இடைஞ்சல்கள் எதிர்பாராமல் 'பல்முட்டுகள்'. இரவு முழுவதும் கண்விழித்துத்திறந்த வெளியில் பரந்த உலகில் நடக்கும். நிகழ்ச் சிகளையெல்லாம் கூர்ந்து கவனித்த ஆங்கில அறிஞர் ஆர். எல்.

---

1. "All is order. All is beauty—why not—volupto"
2. "Love thoughts lie rich when canopied with bowers."

ஸ்டீவென்சன் [1]ஒரு நூலில் இரவில் நிகழும் செய்திகளையெல்லாம் வர்ணித்திருக்கின்றார். நள்ளிரவில் நாய்கள் குரைப்பதைக் கூறியுள்ளார். சேவல் கூவுவதைச் சொல்லியுள்ளார். ஆங்கில நாட்டில் ஓர் ஊரில் இரவில் நடக்கும் செய்திகளை வர்ணித்துள்ள [2]ஒரு நாவலில் (Novel) தமிழ் நாட்டில் நடப்பதேபோல் நாய் குலைக்கின்றது. கோழி கூவுகின்றது. கூகை குழறுகின்றது. இரவில் இயற்கை, உலகம் முழுவதும் ஒன்றேபோல் இருக்கும்போல் தோன்றுகின்றது. மோரிஸ் டெகரென் (Mourice Deguerin) என்ற பிரெஞ்சு ஆசிரியர் இயற்கையைப் பற்றி எழுதுவதில் வல்லுநர். அவர் பிரிட்டனியில் ஒரு ஊரில் ஊர் உறங்கியும் நாய்கள் உறங்காது, நள்ளிரவில் குரைப்பதைக் குறிப்பாகக் கூறியுள்ளார். கஉஉ-ஆம் அகப்பாட்டு நாய் குரைப்பதையும் பிற தடங்கல்களையும் மிக அழகாகக் கூறும்.

"இரும்பிழி மகாஅரிவ் அழுங்கல் மூதூர்
விழவின் றாயினும் துஞ்சா தாகும்
மல்லல் ஆவணம் மறுகுடன் மடியின்
வல்லுரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள்
பிணிகொள் அருஞ்சிறை அன்னை துஞ்சின்
துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்
இலங்குவேல் இளையர் துஞ்சின் வையெயிற்று
வலஞ்சுரித் தோகை ஞாளி மகிழும்
அரவவாய் ஞமலி குரையாது மடியின்
பகலுரு வுறழ நிலவுக்கான்று விசும்பின்
அகல்வாய் மண்டிலம் நின்றுவிரி யும்மே
திங்கள் கல்சேர்பு கனையிருள் மடியின்
இல்லெலி வல்சி வல்வாய்க் கூகை
கழுதுவழங் கியாமத் தழிதகக் குழறும்
வளைகண் சேவல் வாளாது மடியின்
மனைச்செறி கோழி மாண்குரல் இயம்பும்
எல்லாம் மடிந்த காலத் தொருநாள்
நில்லா நெஞ்சத் தவர்வா ரலரே
அதனால், அரிபெய் புட்டில் ஆர்ப்பப் பரிசிறந்து
ஆதி போகிய பாய்பரி நன்மா
நொச்சி வேலித் தித்தன் உறந்தைக்
கல்முதிர் புறங்காட் டன்ன
பல்முட் டின்றால் தோழிநங் களவே." (அகம்-கஉஉ)

---

1. Travels with a Donkey—R. L. Stevenson.

2. The silence of great Bardlow was that of tranquil, peaceful quality which in so characteristic of sleepy English village. An occasional bark of a distant dog and the mournful cry of a disconcerted owl were the only disturbance—with the possible exception of a far off cock who kept the absurd mistake that dawn had come—(Miss Dynamite by Berkley Gray.)

காதலி ஒருத்தி காதலனைக் காணமுடியாமல் நேரும் இடையூறுகளையெல்லாம் அடுக்கிக் கூறுகின்றாள். அவள்நிலை மிகவும் இரங்கற்குரியது. காதலனைக் காணும் அவாவில் ஊரில் விழவும் இழவாகத் தோன்றுகின்றது. விழாவில்லையேல் அன்னை தூங்காள். அன்னையோ தூங்கின் காவலர் திரிவர். காவலர் தூங்கின் நாய் அப்பொழுதுதான் மகிழ்வாகக் குரைக்கும். நாய் வாயை மூடினால் 'பெண்ணிலா ஊரில் பிறந்த வெண்ணிலா' முகில் விட்டுப் பகல்போல் எறிக்கும். நிலவு மறைந்தாலோ, எலியை நினைத்துக் கூகை குழறும். கூகை மறந்தால் மனைக்கோழி விடிந்ததென்று கூவும். எல்லாம் தூங்கி ஏங்கி இருக்குங்கால் அந்நாளைப் பார்த்து அவனும் வாரான். சுடுகாட்டில் தட்டித்தட்டி விழச்செய்யும் முட்டுக் கல்கள்போலப் பல தடங்கல்களைக் கடக்கவேண்டி யிருக்கின்றதே என்று ஏங்கும் தலைவி நமது இரக்கத்திற் குரியள்.

இத்தடங்கல்களில் நாய் குரைப்பதை மட்டும் பல நாட்டுக் கவிகளும் அறிஞர்களும் கூறிப் போயிருக்கின்றனர். ஸ்டீவென்சன், மாரிஸ்டெ கெரென், அலெக்சாண்டர் குப்ரின் (Alexander Kuprin) என்ற உருசிய நாவலாசிரியர் ஆகியோர் நாய் குரைக்கும் நிகழ்ச்சியைக் குறிப்பாகக் கூறியுள்ளனர். 'மைக்கால் மலை'களில் (Maikal hills) வாழும் பழங்குடி மக்களின் காதற் பாட்டில் நாய் குரைப்பது கூறப்படுகின்றது.

[1]"நள்ளிரவில் நாய்கள் குரைக்கின்றன
விண்மீன்கள் வானிடம் வந்துவிட்டன
இலை நீண்டவை பசுமூங்கில்கள்
அவையூடே என்கள்வன் வருகின்றான்
நள்ளிரவில் நாய்கள் குரைக்கின்றன."

இந்த எளிய பழங்குடி மக்கள் பாடலில் நாய் குரைப்பதே முதலும் முத்தாய்ப்புமாக வருவது எண்ணி மகிழத்தக்கது. இவைபோன்ற எளிய பாக்களாகத்தான் சங்கப் பாக்களும் பல நூற்றாண்டுகளுக்குமுன் தோன்றி யிருக்கவேண்டும். "யாருமில்லைத் தானே கள்வன்" என்றே குறுந்தொகைக் காதலி காதலனைக் 'கள்வன்' என்றழைக்கின்றாள். அலெக்சாண்டர் குப்ரின் என்ற நாவலாசிரியர் எழுதிய ஒரு கதையில் ஒரு பல்கலைக் கழக மாணவன் தற்கொலை செய்து கொள்வதை வர்ணிக்கின்றார். துப்பாக்கியை மார்பில் வைத்துச் 'சாகலாமா சாகக்கூடாதா'

1. At midnight the dogs are barking
The stars have come into the sky
Long are the leaves of the young bamboos
And breaking through them comes my thief
At midnight the dogs are barking.
—Love Songs of Maikal Hills.

என்று எண்ணிக்கொண் டிருக்கும்போது இடையிடையே அடிக்கடி நாய்கள் குரைப்பதைக் கேட்கின்றான். அதுதவிர வேறெதுவும் அவன் சிந்தனையைத் தடை செய்வதில்லை. 'நாய்கள் குரைக்கின்றன' என்று பல தடவை தனக்குள் கூறிக் கொள்கின்றான். கடைசியில் சுட்டுச் சாகின்றான். கவிகள், அறிஞர்கள், பழங்குடி மக்கள் முதலியோருக்கு மட்டுமன்றிச் சாகத் துணிந்தவனுக்கும் நாய் நள்ளிரவில் குரைப்பது ஒரு தனிக் கவர்ச்சியை உண்டு பண்ணியிருக்கின்றது. நாய்கள் நள்ளிரவில் குரைப்பது எளிய நிகழ்ச்சி, இயற்கைச் செய்தி ; உலக நிகழ்ச்சி ; பல கவிஞரைக் கவர்ந்த நிகழ்ச்சி. இதையே சங்கப் பாடல்களும் பிற பிற்காலப் பாடல்களும் பரக்கக் கூறக் காண்கின்றோம். இதிலிருந்து பழந்தமிழருடைய இயற்கை ஈடுபாடும், நுண்ணிய உணர்வும் தெள்ளென விளங்குகிறது. நாய் குரைப்பது கூட அவர்களுக்கு அகத்திணையில் ஒரு பொருளாகத் தோன்றிற்று. தமிழரது அகத்திணை வாழ்க்கையில் எதுவும் விலக்கு அன்று.

இயற்கையொடு (Nature) உள்ளுணர்வை (Psycology) இணைத்துப் பார்க்குமுறை அறிவியல் வளர்ந்தபின் தோன்றிய தொன்று; மிகப் பிற் காலத்தது. ஆனால் சங்ககாலத் தமிழர் இயற்கை நிகழ்ச்சிகள், செய்திகள் (Natural Phenomenon) எல்லாவற்றையும் நுண்ணிய உள்ளுணர்வோடு இணைத்துப் பார்த்திருக்கின்றனர். நிறத்திற்கும் இசைக்கும் (Colour-Music) ஒப்புமை காணும் அளவு நுண்ணிய மனவுணர்ச்சி யுடையராயிருந்தனர். நிறத்தையும் ஒழுக்கத்தையும் இணைத்துப் பார்க்கும் நுண்ணுணர்வும் இருந்தது. கற்பிற்குச் சின்னமாக மேல்நாட்டில் வெண்மையான 'லில்லி' (Lily) என்ற பூவை இலக்கியத்தில் கூறுகின்றனர்; ஓவியங்களில் வரைகின்றனர். சங்ககாலப் புலவர்கள் வெள்ளை முல்லையை கற்புக்கு அறிகுறியாக அக் காலத்திலேயே கூறினர். பல்லாண்டுகளுக் கொருமுறை பிறந்து இறந்து பிறந்து இறந்து வாழும் குறிஞ்சிப்பூவின் தேன் சாரலில் சேர்ந்து பெருந் தேனாவதுபோலப் பிறந்து இறந்து வாழும் எல்லாப் பிறப்பிலும் நாடனொடு நட்புக் கூடவேண்டும் என்று கூறக்கூடிய நுண்ணிய உள்ளுணர்வு பழந்தமிழிலக்கியத்தில்தான் காணமுடியும். காதலர் கூட்டத்திற்குக் குறிஞ்சிநிலம், கூதிர்க் காலம், நள்ளிரவு என்று பொருத்தம் கூறும் உளநூலறிவு சங்க இலக்கியத்தில் தான் அக் காலத்தில் காணமுடியும். அகத்திணையில் நாம் காண்பது சிறந்த ஒழுக்கம், உயரிய குறிக்கோள், நுண்ணிய உள்ளுணர்வு, ஆழ்ந்த ஆராய்ச்சி, பரந்த உலகியலறிவு, அஃகி அகன்ற இயற்கை யறிவு. உலகம் அடங்கலும் அகத்திணையில் அடக்கிப் பார்த்த பழந் தமிழரின் அறிவைப் போற்றாதிருக்க முடியாது.

---

# காதல் மாட்சியும் அச்சொல் ஆட்சியும்

[பண்டித, வித்துவான், திரு. த. வடிவேலன்]

(செல்வி, சிலம்பு ௩௨ - பரல் - ௧௧, ௫௪௮ ஆம் பக்கத்தொடர்ச்சி)

காதலின் மாட்சி கண்ட நாம் அச்சொல் ஆட்சியையும் பண்டைய இலக்கியங்களிற் காண்போம்.

காதல் என்ற சொல் வள்ளுவன் குறளிலே,

" தன்னைத்தான் காதல னாயி னெனைத்தொன்றுந்
துன்னற்க தீவினைப் பால்." (௨0௯)

என்ற பாடலில் தன்னைத்தான் விரும்புதல் என்ற பொருளிலும்,

" களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும்." (௨௮௪)

என்ற பாடலில் களவை விரும்புதல் என்ற பொருளிலும்,

" காதல காத லறியாமை யுய்க்கிற்பின்
ஏதில வேதிலார் நூல்." (௪௪0)

என்ற பாடலில் எப்பொருளையும் விரும்புதல் என்ற பொருளிலும்,

" காதன்மை கந்தா வறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாந் தரும்." (௫0௭)

என்ற பாடலில் பிறர்மேல் அன்புகொள்ளுதல் என்ற பொருளிலும்,

" பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல்." (௮௩௨)

என்ற பாடலில் பொருந்தாத செயலை விரும்புதல் என்ற பொருளிலும்,

" உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங்
கட்காதல் கொண்டொழுகு வார்." (௯௨௧)

என்ற பாடலில் கள்ளுண்ண விரும்புதல் என்ற பொருளிலும்,

" எள்ளி னிளிவாமென் றெண்ணி யவர்திறம்
உள்ளு முயிர்க்காத னெஞ்சு." (௧௨௯௮)

என்ற பாடலில் உயிரை விரும்புதல் என்ற பொருளிலும் ஆளப் பட்டிருப்பதைக் காண்கிறோம்.

பத்துப்பாட்டிலே திருமுருகாற்றுப்படையில்,

"ஆர்வல ரேத்த வமர்ந்தினி தொழுகிக்
காதலி னுவந்து வரங்கொடுத் தன்றே."

என வரும் பகுதியில் முருகன் அன்புடையோரிடத்தில் விருப்பங் கொள்ளுதல் எனும் பொருளிலும்,

பெரும்பாணாற்றுப்படையில் "கருங்கை வினைஞர் காதலஞ் சிறார்" எனும் தொடரில் தொழில் செய்வார் தம் புதல்வரை விரும்புதல் எனும் பொருளிலும்,

பட்டினப்பாலையில் "அகலாக் காதலொடு பகல்விளை யாடி" எனும் தொடரில் விளையாட்டை விரும்புதல் எனும் பொருளிலும்,

மலைபடுகடாத்தில் "பழங்குடி துனிதீர் காதலி னினிதமர்ந் துறையும்" எனும் பகுதியில் பழங்குடியினர் அவ்விடத்தில் வாழ விரும்புதல் எனும் பொருளிலும் ஆளப்பட்டிருப்பதைக் காண்கிறோம்.

நற்றிணையிலே "நாமுறு துயரம் செய்யல ரென்னும் காதலங் கிளவி" (௩௩) என்ற பகுதியில் அன்பினாற் சொன்னசொல் என்ற பொருள் தரவும்,

"அவட்கவள் காதலன் என்மோ" (௧௭௬) என்ற தொடரில் தலைவியிடத்தில் பரத்தை விருப்பங்கொள்ளுதல் என்ற பொருள் தரவும்,

"மலையுறை குறவன் காதல் மடமகள்" (௨0௧) எனும் பகுதியில் குறவன் மகளிடத்தில் அன்புகொள்ளுதல் என்ற பொருள் தரவும் ஆளப்பட்டிருப்பதைக் காண்கிறோம்.

குறுந்தொகையிலே "தூமணற் சேர்ப்பனை யானுங் காதலென்" (௫௧) எனும் தொடரில் தலைவனைத் தோழி விரும்புதல் என்ற பொருளிலும்,

"காதற் செவிலியர்" (௨௨௬) எனும் தொடரில் செவிலித் தாயர் தலைவியிடம் அன்புகொள்ளுதல் என்ற பொருளிலும் ஆளப்பட்டிருப்பதைக் காண்கிறோம்.

ஐங்குறுநூற்றிலே "கருங்கோட் டெருமைச் செங்கட் புனிற்றாக் காதற் குழவிக் கூறுமுலை மடுக்கும்" (௯௨) என்ற பகுதியில் தாய் எருமை கன்றின்மேல் அன்புகொள்ளுதல் எனும் பொருளில் ஆளப்பட்டிருப்பதைக் காண்கிறோம்.

பரிபாடலிலே "வாய்மொழிப் புலவீர் காதற்காமம் காமத்துச் சிறந்தது" (கூ) எனும் பகுதியிலே உளமொன்றுபட்ட அன்பு வழிவரும் உடற்றொடர்பு என்ற பொருளில் ஆளப்பட்டிருப்பதைக் காண்கிறோம்.

கலித்தொகையிலே "இவள் தந்தை காதலின் யார்க்குங் கொடுக்கும் விழுப்பொருள்" (சுக) என்ற தொடரில் இரவலர் மேல் அன்புகொள்ளுதல் எனும் பொருளில் ஆளப்பட்டிருப்பதைக் காண்கிறோம்.

அகநானூற்றிலே "யாயே கண்ணினுங் கடுங்கா தலளே" (கஉ) என்ற தொடரிலே தாயானவள் தன் கண்ணைவிட மகளை மிகவும் விரும்புதல் எனும் பொருளிலும்,

"யாமுங் காதல மவற்கென" (உசு) எனும் பகுதியில் தந்தை மகனிடத்து அன்புகொள்ளுதல் என்ற பொருளிலும்,

"பொருளே காதலர் காதல்" (ருங) என்ற தொடரில் தலைவன் பொருளை விரும்புதல் எனும் பொருளிலும்,

"சேர லாதன் காதலர்" (கஉஎ) எனும் தொடரில் சேரலாதனால் விரும்பப்படுகின்றவர்கள் என்ற பொருளிலும்,

"காதலம் தோழி" (கஙஅ) என்ற தொடரில் யான் விரும்பும் தோழி எனும் பொருளிலும் ஆளப்பட்டிருப்பதைக் காண்கிறோம்.

புறநானூற்றிலே "எயிற்றி காதன் மகனொடு" (கஅக) என்ற பகுதியில் மறத்தி மகனில் அன்புகொள்ளுதல் எனும் பொருளிலும்,

"காதன் மறந்தவர்" (கூங) எனும் தொடரில் அரசன் மேற் கொண்ட ஆசை என்ற பொருளிலும்,

"காதல் பெருமையிற் கனவினு மரற்றுமென்" (கசூஅ) எனும் தொடரில் பரிசிலை விரும்புதல் என்ற பொருளிலும்,

"காதலிற், றனக்கு முகந்தேந்திய பசும்பொன் மண்டை, இவற் கீகென்னும்" (உஅகூ) என்ற தொடரிலே ஒரு வீரன் மற்றொரு வீரன்மேல் அன்புகொள்ளுதல் எனும் பொருளிலும்,

"காதல ரதனால்" (ஙருஅ) என்ற தொடரில் வீடுபேற்றை விரும்புதல் எனும் பொருளிலும் ஆளப்பட்டிருப்பதைக் காண்கிறோம்.

சிலப்பதிகாரத்திலே மங்கலவாழ்த்துப்பாடலில் "பெருங் குணத்துக் காதலான்" எனும் தொடரில் பெருங்குணங்களை விரும்புதல் என்ற பொருளிலும்,

இந்திரவிழவூரெடுத்த காதையில் "செருவெங் காதலின் திருமா வளவன்" என்ற தொடரில் கரிகாற்பெருவளத்தான் போரிட விரும்புதல் எனும் பொருளிலும்,

காடுகாண் காதையில் "கானுறை தெய்வம் காதலிற் சென்று" என்ற பகுதியில் கானுறை தெய்வம் கோவலனை விரும்புதல் எனும் பொருளிலும் ஆளப்பட்டிருப்பதைக் காண்கிறோம்.

மணிமேகலையிலே மணிபல்லவத்துத் துயருற்ற காதையில் "காதற் சுற்றம்" என்ற தொடரில் உறவினரை விரும்புதல் எனும் பொருளிலும்,

கந்திற்பாவை வருவதுரைத்த காதையில் "அறஞ் செய் காதல்" எனும் தொடரில் அறஞ்செய்ய விரும்புதல் என்ற பொருளிலும் ஆளப்பட்டிருப்பதைக் காண்கிறோம்.

அன்பர்களே! காதலென்ற சொல் பலபொருளிலும் வைத்தாளப்பட்டிருப்பதை எண்ணியறியுங்கள். பிறவிதொறும் இணைந்துவரும் உயிர்த்தொடர்பால் வாழ்விலும் பிரிவிலும் சாவிலும் இருவரும் ஒருவரே என்ற உயரிய வழிநின்று அன்பு கொண்டு இன்பநல் வாழ்வுகண்டு உண்மைநிலைக்காளாகி என்றும் நீங்கா இன்பப் பெருவாழ்வாம் வீடுபெறும் பேற்றினைத் தந்து நிற்பது காதல் வழிவந்த இல்வாழ்வே யாகுமென்பதனை எண்ணுங்கள். என்றும் உயிர்க்காதல் கொண்டு மாளாது வாழ்வு பெறும் பேரின்பப் பெருநிலைக்கு ஆளாகுங்கள். பண்பின் வழி வாழ்ந்த தமிழன் கண்ட இன்பநல்வாழ்வு காணும் நாம் அன்பின் வழிநின்று அறிவுநிலைத் தமிழ்நாடு காண்போம். அன்புநிலை பெற்ற இன்பநல்லுலகு இணையிலாப் பெருமையுடன் என்றும் நிலைபெறச் செய்வோம்.

வாழ்க நல்லுலகு! வளர்க நற்றமிழர் வழிவந்த இன்பப் பெருங்காதல் மணவாழ்வு!

---

# திருவாதவூரடிகள் திருவுள்ளம்[1]

[வித்துவான், திரு. வீ. குமாரசாமி ஐயர், தமிழாசிரியர், மேலூர்]

உள்ளம், உள்ளுவதற்குக் கருவியாக வுள்ளது. அதன் துணையால் ஒன்றைக் குறித்து எண்ணி ஆய்ந்து தெளிந்த கருத்துக்களையே அறிஞர்கள் நூல்வடிவில் வெளியிட்டுப் போந்தனர். அங்ஙனம் வெளிவந்த நூல்கள், அவர்கள் நமக்கு ஈட்டி வைத்த அறிவுக் கருவூலங்களாகவும் அவர் தம் உள்ளத்தைப் பிற்றை நாளிலுள்ள நம்மனோர் காணக் காட்டும் ஆடியாகவும் திகழ்கின்றன. ஆதலின், திருவாதவூரடிகளின் திருவுள்ளத்தை நாம் கண்டறிய அடிகளார் அருளிய திருவாசகம்—திருக்கோவையார் என்ற இருபெருநூல்களும் நமக்குத் துணைசெய்வனவாம்.

அடிகளார் வழுதி மன்னனிடம் முதல் அமைச்சராயிருந்தார். ஆயினும் அகத்தால் உலகத்தை முற்றுந் துறந்து திருவருள்வழிநின்று புறத்தே உலக வாழ்க்கையை நடத்தி வந்தார். அவரது உள்ளம் இறைவனை யடைய வழிகாட்டும் ஞானாசிரியனையே நாடி நின்றது. அந்நிலையில் மன்னன் அடிகளாரைப் பரிகள் வாங்கப் பெரும் பொருள் அளித்து அனுப்பிவைத்தான். அடிகளார் மன்னனது ஆணையை மேற்கொண்டு செல்லுங்கால், திருப்பெருந் துறையில் குருந்தமரத்தின்கீழ் அடியார் குழாத்துடன் அமர்ந்திருந்த ஞானகுரவனைக் கண்டார். கண்டதும் உள்ளம் நெக்குருகப் பெற்றார். தன்னை ஆட்கொள்ளத் திருமேனிகொண்டு வந்துள்ள சிவபெருமானே எனத் தெளிந்து இறைஞ்சிநின்றார். இறைஞ்சிநின்ற அடிகளாரை ஞானாசிரியனாகக் காட்சிதந்தருளிய சிவபெருமான் அருணோக்கால் நோக்கி, உண்மாசு போக்கி, ஐந்தெழுத்துண்மை நிலையை அறிவித்து, அவணின்றும் அகன்றார். அதனால் அடிகளார் என்றுங் காணாத புதியதோர் இன்பமும் கண்காண எதிர்ப்பட்ட ஞானகுரவன் மறையப்பெற்றதால் அவலமும் கொண்டார். தமக்குச் சிவபெருமான் கைம்மாறு கருதாக் கருணையால் அருளிய இன்ப நிலையை உன்னி உன்னிப் பெருமகிழ்வு கொண்டார். அம் மகிழ்ச்சி மேலீட்டால் திருப்பாசுரங்களைப் பாடத் தொடங்கினார். இறைவன் எழுந்தருளியுள்ள திருத்தலங்கள் தோறும் சென்றார். ஆங்காங்கே இறைவன் தமக்குப் புரிந்த பெருங் கருணைத் திறத்தைத் திருப்பாசுரங்களால் அவ்வப்பொழுது

1. திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த சங்கத்தின் பில் 11—5—58-இல் நிகழ்த்தப் பெற்ற சொற்பொழிவு.

வெளியிட்டார். அப்பாசுரங்களின் தொகுதியே கன்னெஞ்சையும் கனிந்துருகச் செய்யும் திருவாசகமாகிய செழுமறைப் பனுவலாகத் திகழ்கின்றது.

திருக்கோவை யாரோ வெனின், புலவர்களால் ஒரு வள்ளலையோ, மன்னனையோ பாட்டுடைத் தலைவனைக் கொண்டு பாடப் பெற்ற கோவைகளைப் போலல்லாமல், தில்லைக் கூத்தப் பெருமானைப் பாட்டுடைத் தலைவனைக் கொண்ட பெருமையுடையது; அரசகோவை என்று ஆன்றோரால் சிறப்பித்துக் கூறும் தலைமை பெற்றது; வேதம், ஆகமம், இன்பநூல், தருக்கம், இலக்கணம் ஆகிய கலைநூல்களின் நுண்பொருள்களைக் கொண்டது. மற்றும், இந்நூல் அகப்பொருள் துறைகளைக் கோவையாக ஒழுங்கு படுத்திக் காதலின்பத்தி லொழுகும் தலைமக்களுடைய களவு, கற்பொழுக்கங்களை அறிவிக்கும் இலக்கிய நூலாக மட்டு மன்றி அடிகளார் திருவருட் பதிவு பெற்றுச் சற்குருவினைக் கண்ட காட்சி முதலாக இறையருள் பெற்று இன்பநிலையெய்திய திறகத் தெரிவிப்பதாகவும் உள்ளதாம். இதனைத் திருக்கோவையார் உண்மை என்னும் நூலில் துறைகளுக்குக் கூறியுள்ள பேரின்பப் பொருள்களே நன்கு விளக்குவனவாம்.

இத்தகைய இருபெரு நூலின்கண்ணும் அடிகளாரது திருவுள்ளக் கருத்துக்கள் நன்கு பதிந்துள்ளன. அடிகளாரது திருவுள்ளத்தின் சாயலே இந்நூல்கள் எனின் அது பொருந்தும். அடிகளார் ஞானாசிரியரைப் பெற்ற பின்னர் அகத்தும் புறத்தும் துறவுநிலையுற்றாராதலின் தம் சிந்தனையைச் சிவத்துக்கே ஆக்கினார்; இருகண்களையும் அவன்றன் திருப்பாதப் போதுகளைக் காண்பதற்கே ஆக்கினார்; வழிபாட்டினையும் அம்மலர்ப் பாதங்களுக்கே புரிந்தார்; அவர் வாக்கினையும் இறைவன் புகழைக் கூறும் மணிவார்த்தைக்கே பயன்படுத்தினார். இவ்வாறு உளத்தையும் ஏனைய உறுப்புக்களையும் சிவபெருமானுக்கே உரிமைப்படுத்திய அடிகளாரது உள்ளத்தில் யாது நிலைத்திருக்கும்? அஃது எதனைச் சிந்திக்கும்? உள்ளம், உறுப்புக்கள் யாவும் சிவமயமாகவே திகழ்ந்தன. இவ்வாறு தம்மை ஆக்கியவன் சிவபெருமானே எனவும் ஓர்ந்தார். இதனை,

"நினைவித்துத் தன்னையென் நெஞ்சத்
திருந்தம் பலத்துநின்று
புனைவித்த ஈசன்" (திருக்கோவையார். செய்-கஎ0)

"படமாக என்னுள்ளே தன்னிணைப்போ தவையளித்திங்
கிடமாகக் கொண்டிருந் தேகம்ப மேயபிரான்" (திருவாசகம்)

என்பன முதலாய செய்யுளடிகள் அறிவிக்கின்றன.

இன்னணம் அவனருளால் யாவற்றையும் சிவமாக நோக்கும் பேறுபெற்ற அடிகளாரின் திருவாக்கினின் றெழுந்த திருப்பாசுரங்களில் யாண்டும் சிவத்தின் பேரொளியே திகழ்கின்றது. அதனை ஈண்டுத் திருக்கோவையாரிலுள்ள சில திருப்பாசுரங்களி னின்று காட்டுவாம்.

ஒரு பொழிற்கண் தலைமகன் தலைமகளைக் கண்டு காதலுற்றான். இருவர் உள்ளமும் ஒன்றுபட்டன தலைவன் தெய்வப் புணர்ச்சி பெற்றான். பெற்றவன் மீண்டும் கூடும் கூட்டத்தை விரும்புகின்றான். அதனால் தலைவியுடன் பொழிற்கண் வந்திருந்த தோழியர் பலருள் உயிர்த்தோழியாகவுள்ளவளை அணுகுகின்றான். அவள்பால் தன் விருப்பத்தை வெளிப்படையாகக் கூறாமல் கரந்த மொழிகளால் அறிவிக்கின்றான். தோழியோ "என்னுடைய தோழியர் எண்ணிறந்தாருளர் அவருள் நின்னுடைய நினைவு யார் கண்ணதோ?" என வினவுகின்றாள். அங்ஙனம் வினவியவட்குத் தலைமகன் தலைவியினுடைய அவயவங்களின் வனப்பைக்கூறி இத்தன்மையள் என அறிவிக்கத் துணிந்து,

"தில்லையன்னீர்! என்னால் காதலிக்கப் பெற்ற நின் தோழிக்குக் குவிந்த கொங்கைகள் குரும்பையை யொக்கும்; குழல் கொன்றைப் பழத்தை யொக்கும்; செய்யவாய் கொவ்வைக் கனியை யொக்கும்; வாள்நகை வெண்முத்தை யொக்கும்; கண் மலர்கள் செங்கழுநீரை யொக்கும்; ஒளிமுகம் உவாவின்கண் உளதாகிய செவ்விய மதிபோன்றொளிரும்" என்றான்.

இவ்வாறு அவயவங்கள் பலவற்றின் வனப்பையும் எடுத்துரைத்த தலைவன் இயற்கைப் புணர்ச்சி யெய்திய ஞான்று தனக்கு "இவளே என் காதற்றோழி" என்று காட்டிய கண்ணின் வண்ணத்தையும் எடுத்துரைத்தான். அதனை அடிகளார் கண்ணயந்துரைத்தல் என்னும் துறையாக அமைத்துக் கூறியுள்ளார். அப்பாசுரம்,

"ஈசற் கியான்வைத்த அன்பி
னகன்றவன் வாங்கியஎன்
பாசத்திற் காரென் றவன்தில்லை
யின்னொளி போன்றவன்தோள்
பூசத் திருநீ றெனவெளுத்
தாங்கவன் பூங்கழல்யாம்
பேசத் திருவார்த்தை யிற்பெரு
நீளம் பெருங்கண்களே"

(திருக்கோவையார். செய்-கOக.)

இதன்கண் அடிகளார் தலைவியினுடைய கண் இத்தன்மையது என்பதை எவ்வாறு அறிவிக்கின்றார் என்று பார்ப்போம்.

பெண்களுடைய விழிகள் வெண்மை கருமை ஆகிய நிறங்களைப் பெற்றும் செவ்வரி படர்தலால் செந்நிறம் பெற்றும் நீண்டும் அகன்றும் நல்ல ஒளியுடையதாகவும் இருத்தல் வேண்டும் என்பர். கண்ணிற்கு இலக்கணங் கூறிய ஒரு புலவர் "கண்ணிற் கியல்பு கசடறக் கிளப்பின்—வெண்மை கருமை செம்மை யகலம்—நீளம் ஒளியென நிகழ்த்துவர் புலவர்" என்றார். இவ்வாறு அறுதியிட்டு நூற்பாவால் கூறிய புலவர் இன்னாரென யாம் இதுகாறும் அறிந்திலோம். இந்நூற்பாவைப் பேராசிரியர் இப்பாசுரத்தின் உரையில் எடுத்தாள்கின்றார். இத்தகு நல்லிலக்கணம் பொருந்திய கண்களையுடையவள் என்னால் காதலிக்கப் பெற்ற நின்தோழி என்று தலைவன் கூறுகின்றான். இங்குக் கூறியுள்ள கண்ணின் இயல்புகள் ஒவ்வொன்றிற்கும் அடிகளார் ஒவ்வோர் உவமை கூறுகின்றார். அங்ஙனம் கூறப் பெற்றுள்ள உவமைகள் அடிகளாரின் உள்ளத்தியல்பை நமக்கு நன்கு புலப்படுத்துவனவாக வுள்ளன. அவை:

"தலைவியின் கண் அகன்றது; எதுபோலெனின் ஈசனிடத்து யான் வைத்த அன்புபோல அகன்றது. கருமை நிறமுடையது; எதுபோலெனின், அவனால் வாங்கப்பட்ட எனது பாசம் போலக் கறுத்தது. ஒளியுடையது; எதுபோலெனின் அவனது தில்லையின் ஒளியை ஒத்தது. வெண்ணிற முடையது. எதுபோலெனின் அவன் தோள்களிற் சாத்தும் அத்திருநீறுபோல வெளுத்தது. நீளமுடையது; எதுபோலெனின், அவனுடைய பூப்போலுந் திருவடிகளை யாம் பேசும் அத்திருவார்த்தைபோல மிகவும் நெடியவாயிருக்கும்."

என்றிங்ஙனம் தம்மிடத்தும் இறைவனிடத்தும் நிகழ்ந்த செயல்களையே கண்ணின் இயல்புகள் யாவற்றிற்கும் உவமைப் படுத்துகின்றார். மாதர்களுடைய கண் அழகை எத்துணையோ புலவர்கள் வருணித்துள்ளார்கள். மான்விழி, கயல்விழி, வேற்கண், காவியங்கண் என்ற உவமைகளை யெல்லாம் அடுக்கிக்கூறக் கண்டுள்ளோம். அங்ஙனம் கூறிய புலவர்கள் நெறியிற் செல்லாமல் தம் உள்ளத் துணர்விற்கேற்ப உவமைகளை அடிகளார் ஆண்டுள்ள திறத்தை என்னென்று புகழ்வது! அடிகளார் உள்ளம் தெய்வத் திருவுருவில் படிந்துள்ளதாலன்றோ இத்தகு ஒப்புமைகள் தோன்றலாயின! இதன்கண் கண்ணிற்கு இலக்கணமாகக் கூறியவற்றில் செந்நிறம் கூற வில்லையே என்ற ஐயத்தை இச்செய்யுளுக்கு உரைகூறிய பேராசிரியர் "அவன் தோள்களிற் பூசத் திருநீறென்றதனால் சிவப்பும் சொல்லியதாயிற்று" என்று

மிக நுணுக்கமாக ஆய்ந்து கூறிப்போக்கும் மதிநுட்பமும் கண்டு வியக்கத்தக்கதாம்.

தலைவனுடைய குறையை யுணர்ந்த தோழி தலைவியை அணுகி அவள் குறிப்பை அறிய முயல்கின்றாள். அவள், "தில்லையன்னாய் ! நம்புனத்தின்கண் ஒரு பெரியோன் முருகனையொத்த அழகினனாய் வேலேந்திப் பல்காலும் வருகின்றான். வந்துநின்று ஒன்றும் பேசாது சென்று விடுகின்றான். மற்றோர் அமயம் அவன் தீயைச் சார்ந்த தளிரைப்போல வாடிய மேனியனாயும் கையில் வாடாத தழையினனாயும் வருகின்றான். நம் புனத்தை விட்டு அகல்கின்றானுமில்லை. இன்று நம் பொழிற்கண் உள்ள குளத்தில் ஒரு நண்டு தன் பெடைக்கு நாவற் கனியை நல்கிற்று. அக் காட்சியை அப்பெருந்தகை கண்டான். கண்டவன், பேய் கண்டாற்போல உணர்வொழிய நின்றான். என்னே அவன் செயல் !" என்றாள். இவ்வுரையைக் கேட்ட தலைவி, தலைவன் தன்மாட்டுக் கொண்ட காதல் மிகுதியால் வாட்டமுறுதலை யோர்ந்தாள். தலைவியோ மிக்க நாணமுடையவள். ஆதலின் இதனை அறியாதாள்போல வேறொன்றைத் தோழிக்குக் கூறுகின்றாள்.

தன் முன்னர்க் காணப்படும் கடலைச் சுட்டிக் காட்டி "ஏந்திழாய் ! பல பெரிய மரக்கலங்களை மிகுதியாக வுடைய பழையதாகிய இக்கடல் தில்லைக் கூத்தப் பெருமானைப் போலுளது; பார்." என்றாள். மேலும் அவள்,

"கடலோ, சங்குகள் தருகின்ற முத்துக்களை யாம் பெறப் பெரிய உப்பங்கழி நிலங்களைத் தான் பொருந்தியும், பொங்குகின்ற புனலையுடைய கங்கையாற்றைப் பெற்றும், பொலிந்த ஆரவாரத்தையுடைய பாறுகிய மரக்கலங்கள் இயங்கும் அலைகளின் மிகுதியைப் பெற்றும் இருக்கின்றது. (பாறு = மரக்கலம்)

கூத்தப் பெருமானும், திருவடிக்கண் உண்டாகிய பற்றுத் தரும் முத்தியை யாம் பெறும வண்ணம் எல்லாப் பொருளையும் தன்பாற்கொண்டு நிற்கும் ஆகாயத்தையுங் கடந்து நின்ற தான் ஒருவடிவுகொண்டு வந்து பொருந்தியும் பொங்கும் புனலையுடைய கங்கையைச் சூடியும் மிக்க ஆரவாரத்தையுடைய பாறுகிய புட்கள் சூழாநின்ற உயர்வு மிக்க தலையோட்டை யேந்தியும் உள்ளார். (பாறு = பருந்து)

இவற்றால் கடல் கூத்தப் பெருமானுக்கு ஒப்பாம்" என்று ஒப்புமைகளையும் விவரித்தாள். இவ்வாறு தலைவி யுரைப்பதால் யாது பயன் ? பயனற்ற வெற்றுரைகளை அவள் கூறினாளல்லள். இவ்வுரைகளைக் கூட்டிப் பார்க்குங்கால் தோழியின் உரைக்கு

ஏற்ற மறுமொழியும் பெறத் தக்கதாக வுளது. அதனைப் பேராசிரியர், "முன்னர் நீ புரிசடையோன் புதல்வனென்றும் பூங்கணைவேளென்றும் உயர்த்துக் கூறிய வெல்லாம் அவனுக்குரிய; அங்ஙனம் பெரியவன் தன் மாட்டுண்டான புணர்ச்சியான பேரின்பத்தை நாம் பெறுகை காரணமாக இங்ஙனம் எளிவந்து உன்னை வந்து சேர்ந்தான்; அஃதென்போல வெனின், பெறுதற்கரிய சங்கு தருகிற முத்தை நாம் பெறுவான் எளிதாகக் கடல் பெரிய கழியைவந்து பொருந்தினாற்போல. இனி, உனக்கு வேண்டியது, செய்வாயாக என மறுமொழியாயிற்று" என்று எழுதிக் காட்டுவர்.

இவ்வாறு சொற்கிடக்கையாற் பல்பொருள் தோன்ற அடிகளார் தலைவியின் கூற்றாக அறியாள் போறல் என்னும் துறைப் பொருளில் ஒரு பாசுரத்தை அருளியுள்ளார். அது:

"சங்கந் தருமுத்தி யாம்பெற
வான்கழி தான்கெழுமிப்
பொங்கும் புனற்கங்கை தாங்கிப்
பொலிகலிப் பாறுலவு
துங்க மலிதலை யேந்தலின்
ஏந்திழை! தொல்லைப் பன்மா
வங்கம் மலிகலி நீர்தில்லை
வானவன் நேர்வருமே" (திருக்கோவையார், செய்-அகு)

அடிகளார் திருவெம்பாவையில் மேகம் உமையம்மையாருக்கு ஒப்பாயிருத்தலையும், குளம் உமையொரு பாகன் வடிவமாகக் காட்சி யளித்தலையும் கண்டு அருளிய பாசுரங்கள் உண்டு. திருக்கோவையாரில் கடல் சிவபெருமானுக்கு ஒப்பத் தோற்றமளிப்பதாகப் பாடிய இப்பாட்டைக் காண்கின்றோம். இவ்வாறு இயற்கைப் பொருள்களில் இறையுருவத்தைக் கண்டு களிக்கும் அகநோக்கு எவர்க்கு எளிதில் வாய்க்கப் பெறும்! உள்ளத்தில் படிந்துள்ள இறையின் திருவுருவமன்றோ அடிகளார் வாக்கில் சொல்லுருவில் வெளிவருகின்றது.

களவொழுக்கத்தில் ஒழுகிய தலைமக்கள் உடன்போக்காகச் சென்றனர். சென்றவரைச் செவிலித்தாய் தேடிச் சென்றாள். செல்லும் வழியில் எதிர்ப்பட்டோரைக் "காதலர் இருவர் செல்லக் கண்டீரோ?" என வினவினாள். தலைவன் காலில் வீரக் கழலும இடையில் வெண்பட்டும் அணிந்திருந்தான். தலைவி காலில் சிலம்பும் இடையில் செம்பட்டும் அணிந்திருந்தாள். இருவரும் இயைந்து சென்றனர். அத்தோற்றத்தைக் கண்டோர் அவ்வுருவைச் சிவபெருமானும் உமையுமாகவே எண்

ணினர். அதனால் அவர்கள் செவிலித்தாய் வினவியதற்கு "அன்னையே! நீ சொன்ன கொள்கையரை யாங்கள் குன்றத்திடையே கண்டோம். அவ்விருவரும் தம்முள் இயைந்து சென்றனர். அவர்களைப் பார்த்தபோது ஒருபக்கம் மிக்க ஒளிவீசுகின்ற கழலும் ஒருபக்கம் சிலம்பும், ஒருபால் வெண்பட்டும் ஒருபால் செம்பட்டும் விளங்க எல்லாவற்றையு முடையவளாகிய தன் காதலியோடு ஒருவடிவாய் விளையாடும் புலியூரன் என்றே கருதினோம். யாங்கள் எல்லோரும் ஒத்து அவ்வழகைத் தொழுநினைந்தோம். அந் நன்மை எத்தன்மையதா யிருக்கிறது! அஃது எங்களால் சொல்லுந்தரத்ததன்று" என்றாள். இதனை இயைபெடுத்துரைத்தல் என்னும் துறைப் பொருளாக அமைத்து அடிகளார் அருளியுள்ளார். அப் பாட்டு:

"மின்றோத் திடுகழல் நூபுரம்
வெள்ளைசெம் பட்டுமின்ன
ஒன்றோத் திடவுடை யாளொடொன்
றாம்புலி யூரனென்றே
நன்றோத் தெழிலைத் தொழவுற்
றனமென்ன தோர்நன்மைதான்
குன்றத் திடைக்கண் டனம்அன்னை!
நீசொன்ன கொள்கையரே"

(திருக்கோவையார், செய்-உசக)

இதன்கண் தலைமக்கள் இருவர் இயைந்திருக்குந் தோற்றத்தை உமையொரு பாகன் வடிவமாகவே சித்திரித்துக் காட்டுகின்றார், அடிகளார் சிற்சத்தியோடு கூடிய பரசிவத்தை சிந்தையிலாழ்த்தியவர். திருவாசகத்திலும் இத்தெய்வக் காட்சியை,

"தோலுந் துகிலுங் குழையுஞ் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியுஞ்
சூலமுந் தொக்க வளையுமுடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ!"

என்று துதிப்பர்.

இங்ஙனம் அடிகளார் அருளிய திருப்பாடல்களிற் பல, சிவசத்தியின் சொற்சித்திரங்களாகத் திகழ்கின்றன. ஞானாசிரியரது அருளால் மெய்யுணர்வு பெற்று இறையுருவை யோகக் காட்சியாற் கண்ட அடிகளார் அவ்வுருவை உள்ளத்தே எண்ணி எண்ணி இன்புற்றார். அவ்வின்ப மேலீட்டால் தோன்றிய பாட்டுக்களிலும் அத்தெய்வ வுருவம் தோற்றம் அளித்தது. நாம் அத்தெய்வ வுருவை மணிவாசகப் பெருமான் மணிமொழிகளிற் கண்டு கண்டு களிப்புறுவோமாக.

---

# முதன்மொழியும் அதன் முதல்எழுத்தும்

[வித்துவான், திரு. வீரராகவன், பேரையூர்]

உலகுதோன்றிய ஞான்றே மக்களுந் தோன்றினர் என்று யாருங் கூறுர் கூறினுங்கேளார். உலகுதோன்றிய பல்லாண்டுகட்குப் பின்னரே மக்களும் உயிர் வாழ் பிறவுந் தோன்றின என்பது உயிர்நூல் வல்லோர் முடிபாகவு மிருத்தல் நோக்கற்பாற்று. அங்ஙனந் தோன்றிய மக்கள் அஞ்ஞான்றே யின்று வாழ்வதுபோல் வாழ்ந்துவிடவில்லை. அவர்களும் மிருகங்களைப் போலவே புதர்களிலும், மலைக்குகைகளிலும், மரப்பொந்துகளிலும் வாழ்ந்தனர்.

இங்ஙனம் வாழ்ந்து வந்த மக்கள் தங்களுக்குள் எண்ணிய எண்ணங்களை யெல்லாம் இப்போது நாம் வெளியிடுவதுபோல எளிதில் வெளியிட முடியாதவர்களாகவே இருந்தனர். இவ்வாறிருந்த மக்களில் சிலர் செய்கைகளின் மூலம் தங்கள் கருத்துக்களைப் பரப்பலாயினர். இச்செய்கை எவ்வளவு தூரம் நன்மை பயக்கும் என்பதைச் சிறிது கண்டு மேற்செல்வாம்.

இது அருகுள்ள ஒருவன் மற்றவனுக்குத் தான் எண்ணியதை எடுத்துக் கூறப் பயன்படும். கண் பார்வை தெளிவாகத் தெரியுந் தொலைவரை யுள்ளார்க்கெல்லாம் இம்முறை மூலம் தன் கருத்தை வெளியிடமுடியும் என்றாலும் அவர்கட்கே யெல்லாக் கருத்துக்களையும் செய்கைமூலமே காட்டமுடியாது. எனவே இவர்கட்கு இஃது ஓரளவே பயன்பட்டது எனின் அது மிகையாகாது உண்மையும் ஆம்.

இங்ஙனஞ் செய்கையால் எல்லாக் கருத்துக்களையும் பிறர்க்கு அறிவிக்க முடியாதவர்கள் அதற்கு வருந்தியதுண்டு. நாம் நம் கருத்து முழுதையும் பிறர்க்குக் கூறி நம் கருத்தைப் பரப்ப முடியவில்லையே என வருந்தினர். வருந்தின சிலர் அதற்கு என்ன வழிகாண்பது என முயன்றனர். அம்முயற்சியால் தாங்கள் நினைத்ததைப் படமாகத் தீட்டிக்காட்ட முடியும் என்று எண்ணி அதற்கான சாதனங்களையுந் தேடமுயன்று பின்னர்ச் சித்திரங்களின் மூலமே தங்கள் எண்ணங்களை அறிவிக்கலாயினர். இம்முறையால் செய்கைகளின் மூலம் தங்கள் கருத்துக்களைப் புலப்படுத்தியதைவிட அதிக வெற்றியே கண்டனர்.

அப்படித் தாங்கள் சித்திரத்தின்மூலம் அருகிருப்பவர் கட்குமட்டும் நம் கருத்தை வெளியிடல் போதாது என்று எண்

ணினர். சேய்மையரும் உணரவேண்டும் என்று எண்ணிச் சேய்மையார்க்கும் இதன்மூலமே செய்திகளை அனுப்புதல் என்ற முறையை வைத்திருந்தனர். இது சேய்மையிலிருந்தார்க்கு விளங்காத ஒன்றாயிற்று பின்னர் அதைச் செய்கைமூலம் செய்து காட்டி அதுவே இதுவென வுணரவைத்தலி லிடர்ப்பாடுற்று ஓரளவு வெற்றியும் பெற்றனர். எனினும், சித்திரத்தின் மூலம் எல்லோரும் தங்கள் கருத்தைப் பரப்புதல் என்பது இயலாத நிலையாயிருந்து வந்தது. எனவே மேலும் சிந்தித்தனர். அதனால் அவர்களுள்ளத்தில் இன்னுஞ் சில உதித்தன.

அதன் பின்னர் அவர்கள் தங்களிடம் உண்டாகும் ஒலியைப் பயன்படுத்தலாம் என்று எண்ணினர். அங்ஙனமெண்ணிய மக்கள் செயலாற்றவும் முற்பட்டனர். அது செயலளவில் வருங் காலையில் அவர்கட்கு முன்னிருந்த முறையைவிட மிகுந்த வெற்றியை யளித்தது. எனினும் சேய்மையில் உள்ளார்க்குத் தங்கள் கருத்துக்களை வெளிப்படுத்த இம்முறை பயன்படவில்லை. எனவே அதற்குமட்டும் சித்திரங்களைப் பயன்படுத்தியேவந்தனர். இம்முறையில் செய்திகளை அனுப்பத் தெரியாதவர்களும் இதில் வல்லாரிடம் சென்று அவர் துணையால் முடித்தனர். இங்ஙனமொரு மனிதன் தன் எண்ணங்களைப் பிறர்க்கு அறிவிப்பதில் எவ்வளவு இடர்ப்பாடுற்றான் என்பது சிறிது சிந்திக்க வேண்டியே யுள்ளது.

ஒலிமூலம் கருத்துக்களைப் பரப்பிய மக்கள் அதிலும் சிறிது இடருற்றனர். ஒவ்வொரு கருத்திற்கும் ஒவ்வோர் ஒலியை ஒதுக்கி அதை அனைவரும் அறியும் வாய்ப்பை யேற்படுத்தினர். அதன்பின்னரே அது அவர்கட்கு நன்முறையில் பயன்பட்டது எனலாம். என்றாலும் நாய் குரைத்தல் போன்றவற்றை எளிதில் ஒலித்துக் காட்டினர். ஆனால் ஏனைப் பறவை மிருகங்களில் ஒலியை ஒலித்துக் காட்டி அவற்றால் தங்களுக்கு விளைந்த நன்மை தீமைகளை எடுத்துக்கூற வியலாது பெரிது மிடருற்றனர். இங்ஙன மிடருற்ற பின்னரே இவற்றைப் போக்கவேண்டும் என்று எண்ணினர்; அதுமட்டுமல்ல தங்களின் கருத்தைப் பிற் காலத்து வருவாரும் உணரவேண்டும்; அதற்கும் வழிகாண வேண்டும் என்றெல்லாம் முயன்றனர். இங்ஙனமிடர் வருதலை யுணர்ந்துணர்ந்து அதை நீக்கிக்கொள்வதில் முயன்று முயன்று சித்திரத்தின்மூலம் எழுதல் முடியாத ஒன்றாதலின் அதனை அடியோடு விடவுமுடியாமல் புதிதாகத் திடீரென எழுத்துக்களைத் தோற்றுவிக்கவு மியலாது சித்திரத்தின் வெளிக்கோடுகளை மட்டும் (out lines) கொண்டு செய்திகளைப் பரப்பலாயினர். இது சற்று எளிதான முறையாகவுந் தோன்றியது. அதன் மூலம்

பல கருத்துக்களைத் தாங்களெண்ணியவாறே எழுதிவைக்கலாயினர். இங்ஙன மெழுதத்துவங்கியோர் இடமும் கருவியும் தேவை என எண்ணினர்.

பலர் வந்து கூடும் இடங்களில் எழுதிவைத்தால் பலரும் அறிவர் என எண்ணியவர்கள் ஊர் மன்றங்களில் அமைந்த மரங்களிலும், மலைப்பாறைகளிலும் எழுதிவந்தனர். பின்னர்க் களிமண்ணால் பலகை செய்து எழுதி வரலாயினர். இங்ஙனம் எழுதியவர்கள் மரங்களின் இலைகளிலும் எழுதக் கற்றனர். இலைகளைப் பாடம் செய்து அதில் தூரிகை கொண்டு எழுதல் என்ற முறையைச் சிலரும்; ஓலைகளில் ஆணியால் எழுதல் என்ற முறையைச் சிலரும் கைக்கொண்டனர். தூரிகை கொண்டு எழுதியோர் செம்பஞ்சுக் குழம்பையும் பயன்படுத்தினர். பின்னர் எழுத்தாணிகள் தோன்றி ஓலைகளில் எழுதும் முறை நிலவலாயிற்று.

இங்ஙனந் தாங்கள் எழுதிய இலைகளைப் பத்திரமாகப் பாதுகாக்கலாயினர். அதனால் பத்திரம் என்ற சொல்லாலேயே அழைக்கலாயினர். அதுவே இக்காலத்து மரபாகி முக்கியமாகப் பாதுகாக்கவேண்டிய ஆவணங்களையும் (Record) பத்திரமெனப் படுகின்றது. பின் இலைகளையும் பத்திரம் என்று அழைத்தனர்.

இவ்வாறு வளர்ந்து வந்த மொழி வெளிக்கோடுகளின் இயங்கலாயிற்று. அதை இம்முறையைக் கொண்டே தம் கருத்துக்களைத் தெரிவித்தல் போதுமானது என்று எண்ணி மன நிறைவு கொண்டனர். ஆதலின் இதுவே நீடிக்கலாயிற்று. பலர் கூடும் பொது விடங்களில எல்லாம் இம்முறைகொண்டே எழுதிவைக்கவும் முயன்றனர். எனவே அந் நிலைத்தாயகோயில்களிலும் உள்ள கற்சுவர்களில் எழுதினர். இவ்வாறெழுதப்பட்ட இவ்வெழுத்துக்கள் பின்னர் வட்டெழுத்து என்றும் கல்லெழுத்து என்றும் அழைக்கப்படலாயிற்று.

தங்கள் கருத்துக்களை எளிதில் பரப்ப ஓலைகளையும், கோயிற் கற்சுவர்களையும், செப்பேடுகளையும் பயன்படுத்திக் கொண்டனர் நம் மக்கள். இம்முறை நம் நாட்டில் மட்டுமல்ல ஏனை நாடுகளிலும் இருந்தன என்பதைப் பழம் பொருட் காட்சிச் சாலைக்குச் செல்வோரும், மொழியியலார் நூல்களைக் கற்றோருமுணர்வர். இப்படி எழுதிவைக்கப்பட்டவைகளே நம் நாட்டு வரலாற்றை அறிய உதவுகின்றன. இன்னும் எண்ணற்ற கல்வெட்டுக்கள்படி எடுக்க முடியாது அழிந்தும், இருக்குமிடந் தெரியாது மிருக்கின்றன. இவ்வெழுத்துக்களிலும் மாற்றம் வேண்டும் என எண்ணினர்.

எண்ணிய மக்கள் அதை மாற்றி யமைக்கும்போது பொருளோடு மாற்றி யமைத்தல் வேண்டும் என எண்ணினர், எண்ணியாங்குச் செயலாற்றவு முற்பட்டனர். இவர்கள் இவ்வாறெண்ண வேண்டிய தென்னெனின், செய்கை, ஒலி, சித்திரம், வெளிக் கோடுகள் மூலம் தாங்கள் அறிவித்த முறையும் அவ்வாறே இருந்தமையேயாகும். எனவேதான் இனியும் அம்முறை பிறழலாகாது சிறந்தது இதுவே யாதலின் என உறுதி கொண்டனர்.

முயற்சி திருவினை யாக்குமன்றோ? ஆதலின் அதில் முழு வெற்றி கண்டனர். இவ்வாறெல்லாம் முயன்று முதலில் முடிவு கண்டவர் நம் தமிழ்மக்களே என்பது மாற்றுமொழி யறிஞரும் மொழியும் உண்மைகளாம். அதன்பின்னரே பிறமொழி யாளர்கள் இம்முறையைப் பின்பற்றலாயினர். சிலர்க்கே இது ஓரளவு வெற்றியை அளித்தது. ஏனையோர் வெகுளிகொள்வாராயினர். இதனால் பொறுமையிழந்து நம்மீதும் நம்மொழிமீதும் வெறுப்புக் கொள்ளலாயினர். அதனால் எண்ணியபடி யெல்லாம் எழுத்துருவங்களை அமைத்துக் கொண்டனர். அமைத்த பின்னர்ச் சிலர் எதிர்த்தபோது தங்களின் ஆற்றலால் எதிர்ப்பாரைச் சமாளித்துத் தானுட்டித்தனுதே நிறுவினர். இதனால் பிற மொழிகள் பின்னின்றன. நம்மனோர் உயர்வாராயினர். பிறர் இன்று முதல் தம் முழுநோக்கை நம்மீதும் மொழிமீதும் செலுத்தலாயினர். இவற்றால் நம்மொழியிடை இடையிடையே புயல் வீசவும் தொடங்கிற்று. இதனால் வளர்ச்சி சிறிது தடைப்பட்டது. இதுபற்றி மற்றும் ஓர் அமையத்து விளக்குவாம்.

இனி நம்மனோர் எழுத்துக்களைத் தோற்றுவித்த முறையைச் சிறிது காண்பாம்.

எந்தச் சொல்லும் பொருளோடு பொருந்தியனவாக அவ்வாறே அமைந்தே இருக்கவேண்டும் என முயன்றவர்கள் எழுத்தும் அமைதல் வேண்டும் என்று எண்ணுதல் இயற்கையன்றோ? எனவே ஒலிவழி எழுத்துருக்கள் அமைதல் வேண்டும். அங்ஙனம் அமைந்தால்தான் பொருள் மாறாது என எளிய முறை கண்டனர். கண்டபடியே அமைக்குங்காலை ஒலி எழற்குக் காரணம் என்ன என்பது காணவிழைந்தனர். அது வளியால் என அறிந்தனர். எனவே வளியும் ஒலியும் கொண்டே உருவம் அமைதல்வேண்டும் என முயன்றனர். ஒலியெழுப்பும் வளி வெளியேறும் நிலையையும், அவற்றிற்குப் பல், நா, அண்ணம் முதலிய உறுப்புக்கள் செயலாற்றும் முறையையும் கொண்டே எழுத்துக்களை அமைத்தனர். ஈண்டு "மொழிமுதற் காரணமாம் அணுத்திரள் ஒலி எழுத்து" என்ற பவணந்தியாரின் கூற்றும்

ஆய்வுக்குரியமை ஓர்க. இங்ஙனம் அமைந்த எழுத்துக்கள் பின்னர்த் தன்மையால் பெயர் பெறலாயின. இதை மற்றொரு கட்டுரையால் விளக்குவாம். இனி எழுதப்பட்ட எழுத்திலெது முதல் எழுத்து எனக் காண்பாம்.

எக்காரணங் கொண்டு நோக்கினும் பிறர் மறுக்க வியலா நிலையில் முதல் எழுத்தாக அமைந்தது அ என்னும் எழுத்து. இஃது நம்மொழிக்கு மட்டும் முதல் எழுத்தா எனின் ஏனைமொழிகட்கும் ஈதே எனல் மிகையன்று. எவ்வாறு என்பதையும் சற்று நோக்குவோம்.

உலகில் பல மொழிகள் உள்ளன. அவற்றையெல்லாம் மொழிநூலார் இருபிரிவாக்கியே யுரைப்பர். ஒன்று திராவிட மொழி; மற்றொன்று இந்து ஐரோப்பிய மொழி.

திராவிடமொழி என்பது தமிழை முதன்மையாகக் கொண்டது. இம்மொழி, கன்னடம், தெலுங்கு; மலையாளம், துளு முதலியவற்றை உள்ளடக்கிக்கொண்டு உள்ளது. இம்மொழிகள் எழுத்துக்களை அப்படியே ஏற்காது, எழுத்துக்களைச் சிறிது மாற்றியும், கவிழ்த்தும், நிமிர்த்தியும், தலைகீழாக்கியும் வைத்தனர். இதை அவ்வம்மொழி முதலெழுத்தை நோக்குவார் அறிவர். உண்மையும் இஃதே என்பது கால்டுவெல் எழுதிய நூலானும் உணரக் கிடக்கின்றது. இது ஒருபுடை இலக்கண ஒப்புமையும் பிறவும் கொண்ட மொழியிடை உள்ள இயல்புகள்.

இலக்கணமே முற்றும் மாறிய இந்து ஐரோப்பிய மொழியினும் எழுத்தின் முதல் எழுத்து அகரம் ஆக அமைந்திருத்தலை ஆங்கிலம் சமஸ்கிருதம், இந்தி முதலான மொழிகளானுணரக் கிடக்கின்றது. இது ஒலியால் சிறிது மாறுபடினும் வடிவாலொத்திருத்தலை யுற்று நோக்குக.

அகரம் முதல் எழுத்தாக அமைந்திருத்தலை நாம் உற்று நோக்கின் அது எவ்வளவு தூரம் நமக்கும் நம்மொழிக்கும் உயர்வு தேடித்தந்தது என்பது நன்கு விளங்கும்

வாயைத் திறக்குமளவிலேயே தோன்று மொலி அது வாகலானும், அவ்வொலி எழுதற்காம்வளி அவ்வடிவில் சுழற்சியடைதலானும், ஏனை எழுத்துக்களும் இந் நிலையைப் பெற்ற பின்னரே பிறத்தலானும் இதுவே முதலெழுத்து என அமைத்தனர். சிலர் வாய் வடிவுங்கூறுப. அஃது எல்லாவற்றிற்கு மொத்து வருதலின்மையின் அஃதொழிக்க. ஆகப் பல்லாற்றானும் முதல்எழுத்து அ என்பதுணர்ந்தோம். எனவேதான் இஃதுணர்ந்த சான்றோரெல்லாம் அகரத்தைப் பல்லாற்றானும் புகழ்ந்தனர்.

வள்ளுவர்கூடத் தமது முதற்குறளில் இதனை நன்முறையில் விளக்கி யுள்ளமையும் ஈண்டு நினைவிற் குரியது. எல்லாம் வல்ல இறைவனைப் பலரும் பலவாறாகத் தங்கள் கருத்தில் உதித்தன வெல்லாம் கூறி இத்தன்மைகளை உடையவன் இறைவன் எனப் பேதைமையானும், செருக்கானும், செல்வத்தானும், ஆற்றலானும், பிறவாற்றானும் கூறிவருவார்க்கெல்லாம் அச்சம் எழவும்; அவர் நாணவும் இறைத்தன்மைக்கு ஏற்பட்ட மாசினைத் தீர்த்தார் நம் புலவர்.

"அகரமுதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு"

எனக் கூறினர். திருப்புகழ் பாடினாரும் "அகரமுமாகி" எனக் கூறினர். கண்ணன் கூட "எழுத்துக்களில் நான் அகரமாவேன்" என்று கூறியதாகக் கீதை கூறுகின்றது. உரையாசிரியர்களில் சிறந்தவராகக் கருதப்படும் உச்சிமேற் புலவராம் நச்சினார்க்கினியர் தமது தொல்காப்பிய எழுத்ததிகார உரைக்கண் இக்கருத்தையே வலியுறுத்தியமை காண்க.

இங்ஙன மெழுதப்பட்ட எழுத்துக்கள் பின்னர் இலக்கணம் வகுத்தகாலை முதல் சார்பு எனப் பொருளானும், தன்மையானும், பிறப்பானும் வகுக்கப்பட்டு வந்தன. இதுபற்றிய விளக்கம் பின்னர் ஒரு கட்டுரையான் விளக்குவாம்.

இதுவரை நாம் காண்பதிலிருந்து கீழ்க்கண்ட முடிவையே பெறுவோம். அவை வருமாறு:

மக்கள் தங்கள் எண்ணங்களைப் பிறர்க்கு அறிவிக்க முற்பட்டனர். அவர்கள் முதலில் செய்கைமூலம் அறிவித்தனர் பின்னர் ஒலிமூலம் அறிவித்தல் என்றமுறை வந்தது. அதன் பிறகு சேய்மையில் இருப்பவரும் உணர்தற்காகச் சித்திரங்கள் மூலம் கருத்தை அறிவித்தனர். இதுவே எழுத்துக்களில் முதல் தோற்றம். சித்திரவெழுத்தினால் இடர்ப்பாடடைந்தவர்கள் பின்னர் அவற்றின் வெளிக்கோடுகளால் மட்டும் அறிவித்தல் சாலும் என உணர்ந்தனர். இம்முறை ஓரளவு வெற்றிதந்தது. ஆதலின் இதையே பன்னூறாண்டுகள் கையாண்டு வந்தனர். இவ்வெழுத்துக்கள் கல்வெட்டுகளாயின. இது வட்டங்களைப் போன்றே அமைந்தமையின் இதனை வட்டெழுத்து என்றும், கற்களில் மிகுதியாக இவ்வெழுத்தே எழுதப்பட்டமையின் கல்லெழுத்து என்றும் கூறுவாராயினர்.

அதன்பின்னர்ப் பகுத்துப் பகுத்துப் புதிது காண்பதில் தெளிந்த மக்கள் தம் பகுத்தறிவான் மேலும் பொருத்தமான

எழுத்துக்களைப் புதிதாக அமைக்கவிழைந்தனர். அதன்விளைவே இன்று நாம் காண்கின்ற எழுத்துக்கள். இவ்வெழுத்துக்களே பிற மொழிகளில் பாகதங்களாக அமைக்கப்பட்டன. எனவே நம்மொழி ஏனைமொழிகட்கு முதன்மொழி எனவும் நம் எழுத்து ஏனைமொழி யெழுத்துக்கட்கு முதலில் தோன்றிய முதல் எழுத்து எனவும் அழைத்தல் தக்கதன்றோ?

நம் மொழியுள்ளும் முதலெழுத்துண்டு. இம் முதலினும் முதலெழுத்து ஒன்றும் உண்டு. இவ்வெழுத்து எல்லா எழுத்து கட்கும் முதலாக அமைந்திருத்தல் மட்டுமல்ல. பிறவெழுத்து ஒவ்வொன்றும் தோன்றுவதற்குத் தானே முன்னிற்கின்றது. எனவே தானே தனித்தும் எங்கும் நிறைந்தும் உள்ளமையின் அ என்னும் எழுத்து ஏனை எழுத்திற்கும் தலைமை வகிக்கும் தன்மை பெற்றது; எனவே அதுவே முதலெழுத்தாம் தகுதி பெற்றது.

---

## வேலனை வேண்டல்[1]

ஈராறு காதிலே நான்சொன்ன மொழியெலாம்
  எள்ளளவு கேட்கவில்லையோ
 இக்கலி யுகத்திலே பற்பல கிரியிலே
   என்னென்ன புதுமைசெய்தாய்
பாருலகிலே பெரிய மெய்ஞ்ஞான பண்டிதா
  பன்னிருக ணில்லையோசொல்
 பாவையர்கள் மோகமார் அருணகிரி செந்தமிழ்ப்
   பாட்டுமேல் நினைவுற்றவா
தீரனே பொற்கடக மணியுமணி மார்பனே
  தேவர்பணி பொற்பாதனே
 செட்டிமக னேவெலக் கட்டிமணி யேஇனும்
   தெந்தனம் செய்யலாமா
தீரவொய் யாரவெஞ்சூரசங் காரனே
  சேவற் கொடிக் கதிபனே
 தேவர்சிறை மீட்டவா திருமுகம் பார்த்தருள்
  தென்பரங் கிரிவேலனே.

---

1. இப்பாட்டு எளிமையும் பொருந்தியது. பலராலும் பயிலப்படுவது. ஆசிரியர் பெயர் நூற்பெயர் ஏதும் தெரியவில்லை. இதனைத் திருத்தமுற எழுதியுதவியவர் தணிகைமணி, ராவ்பகதூர், திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளை, எம். ஏ. அவர்கள்.

# குளிறு? களிறு?

[மாயூரம், திரு. சாமி. செல்வவிநாயகம்.]

சங்க விலக்கியங்களில் காணப்படும் பாடவேற்றுமைகள் விளக்குமின்னல் மிகுதி. பொருணயங்களைச் சிதைத்தும் சொன்னயங்களை விழுங்கியும் அவைகள் வாழ்கின்றன. மிகப்பொருத்த மானவற்றைக் கண்டு மற்றவற்றை நீக்கிவிட்டால் நயஞ்சிறக்கும். இத்தகைய பணியில் அறிஞர்கள் ஈடுபடுதல் நலம் பயக்கும்.

குறுந்தொகை உச-ஆம் பாடலில் வரும் "எழுகுளிறு மிதித்த ஒரு பழம் போல" என்ற தொடரைப்பற்றி ஐயாற்று நண்பர் ஒருவர் எழுதியிருந்தார்கள். அதில் "எழுகளிறு" என்ற பாட வேற்றுமையைச் சுட்டிக் காட்டி "எழு களிறு" என்று கொண் டால் ஏற்படும் சிறப்பினைக் கூறிப் போந்தார்கள்.

இந்தக் குறிப்பைக் கண்ட யான் குறுந்தொகையைப் புரட் டினேன். அது திருவாளர் ஐயரவர்கள் பதிப்பு. அந்தப் பாடலைச் சிந்தித்த எனக்குக் குளிறு என்பதே சரியான வடிவம் என்று பட்டது. அது வருமாறு:

கருங்கால் வேம்பி னொண்பூ யாணர்
என்னை யின்றியுங் கழிவது கொல்லோ?
ஆற்றயல் எழுந்த வெண்கோட் டதவத்
தெழுகுளிறு மிதித்த ஒருபழம் போலக்
குழையக் கொடியோர் நாவே
காதலர் அகலக் கல்லென் றவ்வே. (குறுந்தொகை, உச)

தலைவி ஒருத்தி, தன் காதலனைப் பிரிந்தாள். பிரிவைத் தாங்கொணாது நொந்து கிடந்தாள். இதன்றியும் ஊரார் வேறு அலர் தூற்றினர். அது அவளை மேலும் வருத் துவதாக இருந்தது. தன்னுடைய உள்ளத்துயரை அவள் தாங்கமுடியாமல் பின்வருமாறு கூறினாள்: "கரிய அடியினை யுடைய வேப்பமரத்தின் ஒள்ளிய பூக்கள் மலர்ந்து மணம் வீசும் புதிய வருவாய் உடைய வேனிற் காலம் என் தலைவன் இன்றியும் கழிவதோ? ஆற்றங்கரையில் முளைத்து நிற்கின்ற வெள்ளிய கிளைகளையுடைய அத்திமரத்து ஏழு நண்டுகளால் மிதிக்கப்பட்ட ஒரு பழம்போல யான் குழையும்படி என் காதலர் நீங்கியபின் மகளிர் அலர் தூற்றுகின்றனர்.

யானை பெரியது. விலங்குகளிலேயே மிகப் பெரியது. அதன் பாதங்கள் அகன்றன. யானை அடிவைத்த இடத்திலுள்ள மண்ணை யெடுத்து எறும்புகள் மேற்றாவ, அவை துடிதுடித்து

மாலும். இத்தகை யானையின் காலில் அகப்பட்ட உறுதியான அறுபதடி உயரத்திலிருந்து விழுந்தும் உடையாத நெற்றுத் தேங்காயே யானாலும் இற்று உடைந்துவிடும். இத்தகைய யானையின் காலிற்பட்ட அத்திப்பழம் நசுங்கி உருமாறிக் கண்டு பிடிக்க முடியாதபடி மண்ணோடு மண்ணாக ஒன்றி விடும்; அழிந்துவிடும். இது இயல்பு. இப்பாடலில் தலைவி அத்திப்பழமாகக் கூறப்பட்டாள். அலரும் பிரிவும் களிறுகள் எனக் கொண்டால் தலைவி அழிந்து விட்டாள் என்பதே பொருள். ஆனால் அவள் இன்னும் வாழ்கிறாள்; குழைந்து வாழ்கிறாள். அது எவ்வாறு முடியும்? யானையடிப்பட்ட அத்திப்பழம் அழிந்தன்றோ போகும். எனவே, "களிறு" அன்று எனத் தெளிக.

இயற்கைச் சூழலாலும் இது விளங்குகிறது. நண்டுகள் ஆற்றோரத்தில் அளையில் வாழும். பழங்களைத் தின்னும் அவாவினால் அவைகள் மேலேறி ஓடி வருகின்றன. அத்திப்பழத்தைப் போட்டியிட்டுச் சிதைக்கின்றன. பழமும் குழைந்து போகிறது. நண்டுகள் நீரில் வாழும் இயல்பினதாலன்றோ "ஆற்றயல் எழுந்த வெண்கோட்டு அதவத்து' எனக்கூறினார்? "குளிறு" ஆதல் இயற்கைச் சூழல் மூலமாகவும் விளங்குவதைக் கண்டு மகிழ்க.

'எழுகுளிறு' என்பதற்கு ஏழு நண்டுகள் என்று உரைவகுத்துப் பின்னர் 'ஒன்றுக்கு ஏழு கூறுவது மரபு' என்று காட்டிய ஐயரவர்கள் பாராட்டிற்குரியவர்கள். அதற்கு எடுத்துக் காட்டிய மேற்கோள்களும் சிறந்தன.

இப்பாடல் மிக்க நலங்கனிந்தது. வேம்பை "கருங்கால் வேம்பு" என்றமையும் அதன் பூவை "ஒண்பூ" என்றமையும் நலம் மிகுந்தன. "இனிய வேனில் என் ஐ இன்றிக் கழிவதோ" என்புழி நம் நெஞ்சம் அழிகின்றது. துயரடைந்த தன்னை "எழுகுளிறு மிதித்த ஒருபழம்" என்றமை சுவையளாவி நின்றது. இன்னும் அலர் தூற்றுவோர் நாவை "கொடியோர் நாவு" என்று பழித்தல் நமக்கு வேடிக்கையாக இருக்கின்றது.

இதைப் பாடியவர், வரலாற்றின் தந்தையான பரணர் ஆவார். [வரலாற்றின் தந்தை எரடோட்டசு எனப்பட்டார். எனினும் பரணரே வரலாற்றின் தந்தையாவதைத் தமிழறிஞர் உணர்வர்) இவர் பாடல்கள் நெஞ்சை உருக்கும் நீர்மையன. இப்பாடலும் இவர் ஆற்றலைப் புலப்படுத்தும். இவர் கபிலரின் உயிர் நண்பர்.

மேலே கண்டவைகளால் "எழுகுளிறு மிதித்த ஒருபழம்" என்பதே சரியானது என்பது உணரப்படும்.

---

# மதுராபதி

[வித்துவான், திரு. ஆ. சிவலிங்கனூர், மயிலம்]

மதுரையைத் தீக்கிரையாக்கித் திரிந்து மயங்கி ஆரனூர் உற்ற வீரபத்தினியாராகிய கண்ணகியார்முன், தீயின் வெம்மைக் காற்றுது, மதுரை நகர்த் தெய்வமாகிய மதுராபதி வந்து தோன்றினள். மதுராபதி பாண்டியரின் குலமுதற் கிழத்தியாவாள். அதனுல் பாண்டிய மரபிற்குப் பழிவராது காக்கும் பொறுப்புடையவளாவாள். கண்ணகியாரால் மதுரை தீக்கிரையாக்கப் பட்டது மன்றிப் பாண்டியனும் கொடுங்கோலன் எனப் பழி தூற்றப்பட்டான். ஆதலின் அப்பழியை நீக்கவேண்டிய கடமையுடையவளானுள் மதுராபதி. அதனுலேயே கண்ணகியார் முன்னர்த் தோன்றினுள்.

இவள் உருவம் கொற்றவை யுருவமாகும். வெற்றி மடந்தையைக் கொற்றவை யென்பர். கொற்றவையுருவம் சிவபிரான் பக்கத்தமர்ந்த உமையம்மையின் உருவமாகக் கூறப்படும். இம் மதுராபதி, ''சடையும் சடையில் பிறையும் உடைய தலையினள்; பன்றிக் கொம்புபோலத் தோன்றும் கடைப் பல்லுடையவள்; தன் உடம்பில் இடப்பக்கம் நீலநிறமும் வலப்பக்கம் பொன்னிறமும் உடையவள்; இடக்கையில் தாமரையையும் வலக்கையில் மழுவையும் உடையவள்; இடக்காலில் சிலம்பும் வலக்காலில் வீரக்கழலும் கட்டியவள்'' என்று கூறினர் இளங்கோவடிகள்; இத்தகைய கோர உருவமுடைய இவள் கண்ணகியார் முன்னர் இனிய தோற்றத்துடன் தோன்றினுள். காரணம் கண்ணகியார் தன் சொல்லைச் செவியுற்றுக் கேட்கவேண்டும் என எண்ணியதே யாம்.

முன்னே தோன்றினுலும் கண்ணகியாரின் எதிரே நிற்காமல், அஃதாவது நேர் எதிராக நிற்காமல், பின்புறமாக வந்து நின்று தொடர்ந்தாள். ஒருவர்க்கு நேர் எதிராக நிற்பது தவறு. எதிரில் நிற்பவன் எதிரி எனப்படுவான்; அவன் பகைவனேயாவான். கோயிலில் இறைவன் முன்னர் நேராக நிற்காமல் ஒரு பக்கமாக நின்று வணங்குவதும் இக்கருத்தை யொட்டியதேயாம். நேராக நின்றுல் எதிர்ப்பதாகக் கருதப்படுவான். எதிரி தான் நேர்நிற்பான். பின்னிருந்து வணங்குபவர்க்கு இடையூறு இல்லாதிருக்கப் பக்கமாக நிற்றல் வேண்டும் என்பதும் ஒரு கொள்கையாயினும் உட்கருத்து மேலதேயாம். அதனுல்தான் பெரியவர்களிடம் பேசும்போதும் பக்கமாக அல்லது பின்னுக இருந்து பேசுதல் வேண்டும் என்பார்கள்.

கண்ணகியார் மதுரையை எரித்த பேராற்றல் வாய்ந்தவர், தெய்வமும் விரும்பும் கற்புடையவர். அவர்முன் மதுரைத் தெய்வம் நேர் நிற்பாளாயின் எதிரியெனப்படுவாள். கண்ணகியார் எதிரி எனக் கருதின் தீங்குசெய்யினும் செய்யலாம். அதனால் தான் கற்புடைத் தெய்வத்தின் முன்னில்லாமல் பின்னிருந்து தொடர்ந்தாள் மதுராபதியாம் தெய்வம். தொடர்ந்து கொண்டே "கேட்டிசின் வாழிநங்கை யென்குறை" என்றாள்.

"கேட்டிசின் என்குறை" என்று கூறியமை மதுராபதியின் பேச்சுத் திறனைக் காட்டுகின்றது. கண்ணகியார் சீற்றத்துடன் இருந்தார். மனதில் கணவன் கள்வன் எனப்பட்டுக் கொலைப் பட்டானே என்ற கவலை—குறையிருந்தது. குறையுடையார்க்கே பிறர் குறையுண்மை தெரியும். அதனால் மதுராபதி, தான் ஒருகுறை வேண்டுவதுபோல் கூறினால் செவிசாய்ப்பார் கண்ணகியார் என்று நினைத்து அவ்வாறு முதற்கண் கூறினாள். வேறு எவ்வகையில் பேச்சைத் தொடங்கினாலும் கண்ணகியார் சினத்துடன் இருந்த நிலையில் பேச்சுக் கொடார். குறையிரந்த தெய்வத்துக்குக் கண்ணகியார் தம் முகத்தை வலப்பக்கமாகத் திருப்பி "யார் நீ; என் பின்னால் வருகின்றாயே; என் துயரை நீ யறிவாயோ?" என வினவினார்.

வினவியவருக்கு "அறிந்தேன்" என்று பதில் கூறினாள் மதுராபதி. அடுத்து "நான் மதுராபதி என்று சொல்லப்படுவேன்; ஒருவார்த்தை சொல்லவந்தேன்; உன் கணவன் நிலைக்கு வருத்தம் உடையேன்" என்றாள். கேட்ட கண்ணகியார் அவள் சொல்லுக்குச் செவிசாய்க்கலானார். அதுவே சமயமாகக் கொண்டு வெறுப்புக் காட்டாமல் தொடர்ந்து கேட்க வேண்டி அத்தெய்வம் நல்ல முகவுரை யொன்று அமைத்துக் கொண்டாள்.

"பெருந்தகைப் பெண்ணொன்று கேளாய், என்னெஞ்சம்
வருந்திப் புலம்புறு நோய்.
தோழீ யீதொன்று கேட்டி, யெங்கோமகற்கு
ஊழ்வினை வந்தக் கடை.
மாதராய் ஈதொன்றுகேள்உன் கணவற்குத்
தீதுற வந்த வினை"

என்று மும்முறை விளித்து, மூன்று செய்திகள் கூறுவதாக முதற்கண் கூறினாள். தன் கூற்றிற்குக் கண்ணகியார் செவி சாய்த்தமையின் அதனைவியந்து பெருந்தகைப் பெண் என்றும், தன்னோடு உரையாட நின்றமையின் 'தோழீ' என்றும், கணவன் கோவலனிடம் காதல் மிக்குத் துயர்நிலையில் இருந்தமையின் 'மாதராய்' என்றும் விளித்தாள். அன்றியும் தன் நெஞ்சம்

புலம்புறு நோயைக் கூறிக்கொள்ளும் நிலையில் கண்ணகியார் உயர்ந்தமையினால் 'பெருந்தகைப் பெண்' என்றும், கோமகற்கு ஊழ்வினை வந்ததற்குத் தான் வருந்துதலின் கோவலனுக்கு வருந்தும் அவரொடு ஒத்த வகையில் 'தோழி' என்றும், கணவற்குத் தீதுற வந்த வினையை அறியாமையின் தான் அறிவிக்கவேண்டியிருந்த உயர்வு தன்பால் உண்மையின் 'மாதராய்' என்றும் விளித்தாள் மதுராபதித் தெய்வம் என்றும் கூறலாம்.

என் துயர் அறிவாயோ என்று கேட்ட கண்ணகியார்க்கு, 'அறிவேன்' என்று தன் துயரையே முதற்கண் கூறினாள் அவள். அஃதாவது பாண்டியன் தீதில்லாதவன் என்பதையே முதலில் வற்புறுத்திக் கூறினாள். "காதில் மறைநாவோசை யல்லது யாவதும் மணிநாவோசை கேட்டது மிலன்" என்பது அவள் கூற்று. குடிகள் குறைவேண்டி மணிநாவை அசைக்கவில்லை யிதுவரையிலும்; ஆதலின் அதன் ஓசையை அவன் கேட்டிலன் என்றாள். ஒருகால் குடிகள் மணிநாவை அசைத்து ஓசையுண்டாக்க அஞ்சி அடங்கினரோ என ஐயுறலாம். அதற்கும் இடமில்லாதபடி "தன்னடியைத் தொழுது வணங்காத பகைமன்னர் பழிகூறினும் கூறுவரேயன்றி, இவன் மக்கள் பழிகூறமாட்டார்கள்" என்றாள். "குடிபழிதூற்றும் கோலனும் அல்லன்" என்பது அவள் கூற்று.

பாண்டியன் கோவலனைக் கொலைப்படுத்தியதற்குக் காரணம் அவன் தன் மனைவியின் ஊடலைத் தீர்க்கச் சென்றபோது மதி மயங்கி யிருந்தமையல்லவா? அதனால், 'இதுபோல் காமம் மிக்கவனாக இருந்தவனாதலின் தன் கணவனைக் கொன்றான்' எனக் கண்ணகியார் எண்ணக்கூடாது என்பதற்காக "இப் பாண்டியர் குடியில் பிறந்தவர்களுக்கு இளமை யென்ற யானை, மகளிருடைய பார்வையாலே காமமாகிய மதம் மிகுந்து, இருக்கும் இடத்தை விட்டுச் செல்லும் நெஞ்சத்தோடு கல்வி யறிவு என்ற பாகனுக்கும் அடங்காமல் ஓடுமானாலும், ஒரு குற்றமும் விளையாது; ஒழுக்கத்தோடு இயைந்த சிறந்த குடியாகும் பாண்டியர்குடி" என்றாள். எனவே, 'காமவயத்தான் கோவலன் கொலைப்படுத்தப் படவில்லை' என்பதை உணர்த்தினாள்.

"..........................நன்னுதல் மடந்தையர்
மடங்கெழு நோக்கின் மதிமுகம் திறப்புண்டு
இடங்கழி நெஞ்சத் திளமை யானை
கல்விப் பாகன் கையகப் படாது
ஒல்கா வுள்ளத் தோடு மாயினும்
ஒழுக்கொடு புணர்ந்தவிவ் விழுக்குடிப் பிறந்தோர்க்கு
இழுக்கம் தாராது."  (சிலம்பு. ௬. உ௫: ௧௫-௪௧)

என்பன மதுராபதி வாக்காக அமைந்த அடிகள். 'இளமை காரணமாகக் காமம் மிக்கு நெஞ்சம் ஓடுமாறுலும் குற்றம் தாராது பாண்டியர் குடிக்கு' என்ற வார்த்தை எவ்வாறு பொருந்தும் என நாம் நினைக்க வேண்டும். ஒழுக்கத்தோடு புணர்ந்த விழுக்குடியாதலின் இழுக்கம் தாராது எனப் பதில் கூறினுள் தெய்வம். எப்போதும் ஒழுக்கத்தை விடாது பற்றி வரும் குடியில் ஒழுக்கத் தவறு நேராது. நேர்வதுபோல் காணப் பட்டாலும் முடிவில் நல்லதாகவே விளங்கும். இதற்குச் சான் றும் ஒன்று காணலாம்.

மிதிலை சென்ற இராமன் கன்னிமாடத்தில் சீதையைக் கண்டான், காதல் கொண்டான். இருவரும மாறிப்புக்கு இத யம் எய்திஞர்கள். அன்று மாலை இராமன் தனித்திருந்து சிந் தித்தான். தான் கண்ட அவள், மணம் ஆனவளா என்ற ஐயம் வந்தது. திருமணம் ஆனவளாயின் பிறன்மனை விழைந்த குற்றம் வந்துசேரும் என அஞ்சினுன். பின் தன மனதையே நினைத்துப் பார்த்தான். எக் காலத்திலும் தன் மனம் நல்ல வழியிலேயே சென்றது. எத்தனையோ மாதர்களைக் கண்டிருக்கிறுன். ஒரு வரிடத்திலும் ஒரு காலத்திலும மனப்மாறி நினைத்ததில்லை. இன்றுமட்டும் சீதையிடம் மாறி நினைத்தது. அதனுல் இந்த மாறுதலான நினைப்பும் நல்லதற்கே யமையும்; அதனுல், 'அவள், மணமானவள் அல்லள். கன்னியே யாவாள்' என்ற முடிபுக்கு

"ஏகு நல்வழி என்மனம் அல்வழி
யாகுமோ வதற் காகிய காரணம்
பாகு போல்மொழிப் பைந்தொடி கன்னியே
யாகும் வேறிதற் கையுற வில்லையே."

இவ்வாறு தன் மனதைக் கொண்டே சீதை மணமாகாதவள் என்று உறுதி கட்டியதாகக் கம்பர் பாடியுள்ளார். கம்பர் வாக்கி லிருந்து நாம் அறிவது "ஒழுக்கமொடு புணர்ந்த விழுக்குடிப் பிறந் தார்க்கு இழுக்கம் வாராது" என்பதுதான். அதனுல் மதுராபதி கூற்று மிகவும் உண்மையானதே என்னலாம்.

அடுத்துக் குடிபழி தூற்றும் கோலன் அல்லன் பாண்டி யன் என்பதற்குப் பொற்கைப் பாண்டியன் வரலாற்றைக் கூறினுள். பாண்டியன் அறிந்தோ அறியாமலோ தவற நேர்ந் தாலும் அவன் நாட்டுத் தெய்வங்கள் அவனைத் திருத்தும் என்ப தற்கும் ஒரு நிகழ்ச்சி கூறினுள். அந் நிகழ்ச்சி:

"சோழநாட்டில் வாழ்ந்த பராசரன் என்ற பார்ப்பனன் சேர நாட்டரசன் பல்யானைச் செல்கெழு குட்டுவனைக் கண்டுவர வேண்டிச் சென்று, கண்டு அவனுலும் பிறராலும் சிறப்புச்

செய்யப் பெற்றுப், பலவகையான அணிகளும் பொன்னும் பிறவும் கொண்டு திரும்பு காலையில், பாண்டி நாட்டுத் திருத்தங்காலூர் வந்தான். அங்கு விளையாடிய பார்ப்பனச் சிறுவர்களைக் கண்டு தன்னுடன் மறையோதுமாறு கூறினன். அவருள் ஒருவன் நன்கு ஓத, அவனுக்குப் பரிசாகப் பல பொன்னும் மணிகளும் கொடுத்துச் சென்றான். பரிசுபெற்ற தக்கிணாமூர்த்தி என்ற அச் சிறுவன், தன் தாய் தந்தையரிடம் கொடுத்தான். அவர்கள் மகிழ்ந்து அணிந்து கொண்டனர். திடீரெனத் தோன்றிய அவர்கள் செல்வநிலை கண்ட அரசகாவலர், திருட்டுக் குற்றம் சாட்டி வார்த்திகன் என்ற அம்மறையவனைச் சிறை செய்தனர். அவன் மனைவி கார்த்திகை யென்பாள் அழுது புரண்டாள். இதனால் மதுரையில் உள்ள துர்க்கைக் கோயில் கதவு அடைத்துக் கொண்டது. இஃது அரசனுக்கு எட்டியது. காரணம் வினவினன். வார்த்திகனைச் சிறைப்படுத்திய செய்தி யறிந்தான். அரசன் வார்த்திகனிடம் வந்து மன்னிப்பு வேண்டிச் சிறைவிடுத்தான். அப்போது ஊர் அறியக் கொற்றவை கோயில் கதவு திறந்தது. பின்னர், "பார்ப்பார்க்குப் புதையலோபிறர் விட்ட பொருள்களோ எங்கெங்கிருந்து கிடைத்தாலும் கிடைத்தவர்கட்கேசொந்தம்' என்றும் பறையறைவித்தான்.

இவ்வரலாற்றைக் கூறி இதனால் தானும் மதுரைத் தெய்வம் ஆதலினால் தன் கடமையைச் செய்ய வந்ததாகவும் கூறினள். முடிவாகக் கண்ணகியாரின் பழம் பிறப்பையும் கூறி மதுரையில் தீ பரவாதபடி வேண்டிச் சென்றாள்.

---

## ஒன்றே காண்!

[நாஞ்சில், திரு. கா. கணபதி]

நுண்ணுணர் வதனால் நன்கெண்ணி
நுட்பப் பொறியா மிவ்வுலகைக்
கண்ணுக் கினிய பொருள்களொடு
கருத்தும் ஒன்றால் படைத்தவரார்?
மண்ணும் விண்ணும் மலைகடலும்
மாறா தென்றும் நிறுத்தியதார்?
வெண்ணெய் அதனில் நெய்போல
விளங்கும் தெய்வம் ஒன்றேகாண்!

---

# ஆள் மயக்கம்

[திரு. கு. பரமசிவன், எம். ஏ.]

"கங்கைகொண்ட சோழன்", "ஈழமும் பாண்டியும் கொண்ட கோப் பரகேசரிவர்மன்" என்றெல்லாம் இடைக்கால மன்னர்கள் அவர்கள் ஆட்சிக் காலத்தின் சிறப்பான நிகழ்ச்சியை ஒட்டிப் பெயர் பெற்றமை போலவே, புறநானூற்றுப் புலவரும் புரவலரும் பெயர் பெற்றிருந்தனர். சில இடங்களில் மன்னன் ஒருவனே வெவ்வேறு சிறப்புப் பெயர்களுடன் காணப்படுதலும் உண்டு.

இது "மேற்கூறிய இருவகையார் பெயர்களுட் சில பெயர், கையெழுத்துப் பிரதிகளிற் பலவகைப்பட்ட விசேடணத்தோடு கூடியும் கூடாமலும் வேறு வேறிடத்து வேறுவேறு விதமாக எழுதப்பட்டும் இருந்தன; அவை இன்ன பெயரின் பரியாயங்கள் எனத் தெரிந்தும் அவற்றை ஒரேவிதமாகத் திருத்திவிடாமல் ஏனைத்தொகைகளிலும் மற்றை நூல்களிலும் உரைகளிலும் வழங்கும் பழைய வழக்கத்தைத் தெரிவித்தற்கு அவை பிரதிகளில் இருந்தவாறே பதிப்பிக்கப் பட்டன." எனத் தமிழுக்கு வாழ்வளித்த தண்ணருளாளர் டாக்டர். உ. வே. சாமிநாதையரவர்கள் புறநானூற்று மூன்றும் பதிப்பின் முகவுரையில் எழுதியவற்றால் உணரப்படும்.

அடைமொழி அல்லது சிறப்புப் பெயர் வேறாகக் காணப்படுதல் ஒன்றே பற்றி அரசரும் வேறுவர் என்றுரைத்தல் பொருந்தாக் கூற்றாகும். இன்னஇன்ன பெயருடையார் இவர் எனக் கண்டறிந்து தெளிதலே சங்ககால வரலாற்றினை உணர்தற்குத் துணைசெய்யும்.

அதியமான் நெடுமான் அஞ்சி, அதியமான் தகடூர் பொருது வீழ்ந்த எழினி என இருபெயர்கள் புறநானூற்றுள் காணப்படுகின்றன. இவற்றுள் இரண்டாவது பெயர் தகடூர் எறிந்து வீழ்ந்த எழினி எனவும் சில ஏடுகளில் காணப்படுகிறது. இரு பெயர்களாலும் குறிக்கப்பட்டோர் இருவராவர் என மயங்குவாரும் மயக்குவாரும் உளர். இருவரா ஒருவரா என்பதனை நோக்குவோம்.

தகடூர்ப் போரில் வென்றவன் யாவன் என்னும் அறிவு, வீழ்ந்துபட்டவன் யாவன் என்னும் தெளிவினைப் பிறப்பிக்கும். தகடூர்ப் போர் பற்றிய குறிப்புகள் பதிற்றுப்பத்துள் எட்டாம்

பத்தின் எட்டாம் பாடலிலும் பதிகத்திலுமே உள்ளன. பிற மன்னர் எவரும் தகடூரை வென்றவராகக் கூறப்பட்டிலர் ஆதலின், பெருஞ்சேரல் இரும்பொறையே (எட்டாம்பத்தால் பாடப் பட்டவனே) தகடூரை முற்றியவனாவன். "தகடூர் எறிந்த பெருஞ் சேரல் இரும்பொறை" என்னும் பெயர் வழக்குண்மையும் தகடூரை வென்றழித்தவன் இவனே என்பதனைக் காட்டும்.

பெருஞ்சேரல் இரும்பொறையைப் பாடிய புலவர், அரிசில் கிழார் ஆவர். கபிலர், பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர் கிழார் ஆகியோர் நால்வரும் கடையெழுவள்ளல்களுள் ஒருவனாய வையாவிக் கோப்பெரும் பேகனைக் கண்ணகி காரணமாகப் பாடி யுள்ளனர். ஆதலின் இந் நால்வரும், குறிப்பாகப் பரணர், அரி சில் கிழார் காலத்தவர். இப்பரணர், அதியமான் நெடுமானஞ்சி திருக்கோவலூர் எறிந்த காலத்து அவனைப் பாடினர். இஃது,

"அன்றும் பாடுநர்க்கு அரியை; இன்றும்
பரணன் பாடினன் மன்கொல் மற்றுநீ
முரண்மிகு கோவலூர் நூறிநின்
அரண்அடு திகிரி ஏந்திய தோளே" (புறம். ௯௯: ௧௧-௧௪)

என்னும் ஔவையார் மொழியால் துணியப்படும். அன்றியும் பரணரே,

"நெடுநெறிக் குதிரைக் கூர்வேல் அஞ்சி
கடுமுனை அலைத்த கொடுவில் ஆடவர்
ஆகொள் பூசலின் பாடுசிறந்து எறியும்
பெருந்துடி" (அகம். ௩௭௨)

என அஞ்சியைக் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறாகப் பரணர் காலத்து ஆவது, பெருஞ்சேரலிரும்பொறை காலத்துத்-தகடூரை யாண்ட அதியர் குடியினன் அதியமான் நெடுமான் அஞ்சியே யாவன் என்பதனை உணர்கின்றோம்.

அதியமான் நெடுமானஞ்சியே எழினி எனவும் வழங்கப்படு வான். கடையெழு வள்ளல்களைக் கூறப்போந்த பெருஞ் சித் திரனார்,

"ஊராது ஏந்திய குதிரைக் கூர்வேல்
கூவிளங் கண்ணிக் கொடும்பூண் எழினியும்"
(புறம். ௧௫௮: ௮-௯)

என அஞ்சியை எழினி என்னும் பெயரால் குறிப்பிட்டனர். தாயங்கண்ணனாரால்,

"பந்து புடைப்பன்ன பாணிப் பல்அடிச்
சில்பரிக் குதிரைப் பல்வேல் எழினி" (அகம். ௧௦௫: ௯-௧௦)

எனப் பாடப் பட்டவனும் அஞ்சியே என்பர். டாக்டர், உ. வே. சாமிநாதையரவர்களும், "நுகம்படக் கடக்கும் பல்வேல் எழினி" (குறுந். ௮0: ௫) என்னும் அடியின் விரிவுரையில் "எழினி-அதியமான் அஞ்சி" என எழுதினர்.

"அதியர்" குடிப்பெயர் என்றும், 'அஞ்சி' இயற்பெயர் என்றும் கூறுதல் பொருந்தும்; எழினி எனும் பெயர் எவ்வாறு வந்தது?" என்று சிலர் ஐயுறுதல் கூடும். எழினி என்பது அஞ்சியின் தந்தை பெயரென்பர். "அதியமான் நெடுமான் அஞ்சியின் தந்தை பெயர் எழினி என்பது. அதனற்ருன், அஞ்சி, தன் மகனுக்கும் எழினி எனப் பெயர்வைத்தான். தந்தை பெயரைத் தன் மகனுக்கு வைப்பது தமிழர் மரபு. இம்மரபு பற்றியே தந்தையை நோக்கத் தன் மகனைத் தன் தந்தைக்குப் பெயரன் என்பது வழக்காயிற்று. தந்தை பெயரையும் உடன்கூட்டி 'எழினி அதியமான்' என்றலும் தமிழியல்பாதலால், இங்கே 'எழினி' என்ருர். "அதியமான் தகடூர் பொருது வீழ்ந்த எழினி' என இவனே கூறப்படுமாறு காண்க" என உயர்திரு ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையவர்கள் புறநானூற்றுள் ௧௫௮-ஆம் பாடலின் விளக்க உரையில் எழுதுதல் காண்க.

மேற்கூறியவற்ருல் அதியமான் நெடுமானஞ்சியின் ஒரு பெயரே எழினி என்றும், அவனே தகடூரில் பொருது வீழ்ந்தவன் என்றும், அக்காரணம் பற்றி அவன் தகடூர் பொருது வீழ்ந்த எழினி எனவும் அழைக்கப்படுவான் என்றும் அறிகின்ரேம். ஆயினும் எழினி வேறு, அஞ்சி வேறு எனத் தோன்றுமாறு தொகைநூற் பாடல்கள் பதிப்பிக்கப்படுகின்றன; குறிப்புரையும், விளக்கவுரையும், பதவுரையும், பாடினேர் பாடப்பட்டோர் வரலாறுகளும் எழுதப்படுகின்றன.

சிறப்புப் பெயர் மாற்றத்தால் விளையும் 'ஆள்மயக்கம்' மிகுதி. 'ஆள்மயக்கம்' அகலவேண்டுமாயின், பழைய முறையிலேயேயன்றி பாடியவர் வரிசையிலோ, பாடப்பட்டோர் வரிசையிலோ பாடல்கள் வகுக்கப்பட்டும் தொகுக்கப்பட்டும் வெளியிடப் படுதல்வேண்டும். பெயர்கள் பண்டை ஏடுகளில் காணப்படுவன ஆதலால் சிறப்புப் பெயர் நீக்கி ஒரேவிதமாகத் திருத்துதல் முறையா எனலாம். சிறப்புப் பெயர்களையும் அடைமொழிகளையும் செய்யுளின் முன்னே பின்னே குறிப்புரையில் கொடுத்துவிடலாம். அல்லது பழைய முறையில் சில பதிப்புகளும், புதுமுறையில் சிலவும் வெளியிடப்படுதல் வேண்டும். அவ்வாருனல் தான் பண்டைத் தமிழக வரலாறு தெளிவுறும்.

# கலைஞன் பண்பு

[குடந்தை, திரு. சு. கண்ணன்]

ஒரு பெரிய கருங்கல். நாம் பல நாட்களாகப் பார்த்து வருகிறோம். ஆம். ஒரு கடினமான பொருள், ஒன்றுக்கும் பயன்படாது. வேண்டுமானால் நம் வீட்டு வாயிலில் படியாகப் போடலாம் என்று எண்ணி, பிறகு அதைப்பற்றி அதிகம் கவலைப்படாது போய்விடுகிறோம்.

ஆனால் அதே கல்லை ஒரு கலைஞன் பார்த்தான். ஒரே மகிழ்ச்சி அவனுக்கு. தூக்கமுடியாது எப்படியோ ஒருவாறு தன் குடிலுக்குக் கொண்டு சேர்த்தான். சிந்தனையில் ஒரு உருவம் எழுந்தது; சில நாட்கள் 'டிங்டிங்' என்ற ஒலி கேட்டது. பிறகு ஒருநாள் பார்த்தால் சிந்தனையில் எழுந்த உருவம் அழகின் வடிவமாக அங்கே காட்சி அளித்தது. நாம் ஒதுக்கிய கல்லை, கண்ணுக்கழகியதொரு கலைப்பொருளாக, உருவாகச் சமைத்துவிட்டான்.

ஓர் அழகிய தடாகம்; நிறையத் தாமரைகள் மலர்ந்துள்ளன. மலரில் வண்டுகள் மது உண்டு மயங்கிக் கிடக்கின்றன இவற்றைப் பார்த்தால் நாம் சற்று அதன் அழகை ரசித்துவிட்டு அதைப் பின்பு மறந்துவிடுவோம். அதையே ஒரு கலைஞன்—ஓவியன் பார்த்தான். அதை உற்று நோக்கி மனதில் அப்படியே எழுதிக்கொண்டான். பின்பு வர்ணங்களை வாரிக் கொட்டினான்; இப்படியும் அப்படியும் கோடுகள். சற்றுநேரம் கழித்துப் பார்த்தால் சோலையிலிருந்த வாவி இவன் வீட்டிலிருந்தது. அப்படி உயிரோவியமாகத் தீட்டிவிட்டான்.

இந்தக் கலைஞன் கூட்டத்தில்தான் புலவரும் உட்படுவர். சாதாரணமாக நாம் எங்கும் காணும் காட்சி; நாள்தோறும் நடக்கும் செயல்கள். இவைகள் நமக்கு அதிகம் இன்பம் கொடுப்பதில்லை நாமும் அவைபற்றி அதிகமாகக் கவலைப்படுவதில்லை. ஆனால் அவைகளே ஒரு புலவன் வாயிலாக வரும்போது ஏதோ ஓர் உயிர்ச்சக்தி பெற்றுவிடுகின்றன. இணையிலா இன்பம் தரும் பொருளாக மாறிவிடுகின்றன. இதற்கு அவன் உபயோகப்படுத்தும் கருவி நாம் பேசும் சாதாரணச் சொற்கள் தாம்; பழக்கத்திலிருப்பவையே. இருந்தாலும் அதில் ஒரு தனி சக்தி உளது.

கருங்கல் நமக்குக் கிடைப்பது அரிது அல்ல; அவனது உளியும் சுத்தியும் அகப்படாத பொருள்கள் அல்ல. இருந்தாலும் சிற்பியைப்போலச் சிற்பம் அமைக்கமுடியுமா? அல்லது வர்ணங்களை நாம் வைத்துக்கொண்டு ஒரு காட்சியை ஓவியமாக்க முடியுமா? அன்றாடம் பல நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. பல காட்சிகளைக் காணுகிறோம். நம் மொழியும் சொற்களும் நமக்கு நன்கு பழக்கம் உண்டு. இருந்தாலும் கவிஞனைப்போல அழகுறக் காவியம் எழுதமுடியுமா? இவையெல்லாம் கலைஞருக்கே உரித்தானவை. அவைகளை அந்தக் கலைப்பண்பு உடையவராலே தான் செய்யமுடியும். கற்பனையெனும் சொத்துடையார் மட்டும் தான் இயற்றமுடியும்.

மேற்கூறிய கலைஞர் பட்டியலில் சேர்ந்தவன்தான் கம்பன் என்ற மகாகவியும். அவன் கலைப்பண்பு நிறைந்தவன்; ஒரு கற்பனை ஊற்று. கவியரசன் என்று பெயர் வாங்கிவிட்டான் என்றால் வேறு என்ன சொல்லவேண்டும்?

அவன் இயற்றிய இராமகதை ஓர் இலக்கியப் பூங்கா; கற்பனை நிறைந்தது; காவிய மலைகளுள் உயர்ந்தது; இணையற்ற இன்பச் சுரங்கம்.

தந்தை சொல்லுக்கிணங்கிக் கானகஞ்சென்ற இடத்தில் மனைவியை இழந்து இன்னலுற்று, பின்பு அரக்கரை அழித்து, மனையாளை மீட்டு அரியணை ஏறிய ஒரு சாதாரண அரசகுமாரனின் கதைதான் அதைக் கம்பன் தன் கைவண்ணம் காட்டி இறவாப் புகழுடை நூலாக்கிவிட்டான்.

கம்பன் தன் காவியத்தில் எத்துணையோ இயற்கைக் காட்சிகளையும் உலகியல் செயல்களையும் சித்திரித்திருக்கிறான். அவையெலாம் கம்பன் கைபட்டு வெளிவரும்போது அழியாத்தன்மை பெற்று உயிரோவியமாக வந்துவிடுகின்றன. அந்தமாதிரியான ஓவியம் ஒன்றைக் காண்போம்.

காவிய ஆரம்பத்தில் கோசல நாட்டின் சிறப்பைக் கூறவந்த கம்பன் அந் நாட்டின் மருதநில வளத்தைப் பாடுகிறான். கம்பன் கோசல நாட்டைப் பார்த்தவன் அல்லன். இருந்தாலும் தமிழ் நாட்டில் கண்ட மருதநிலத்தை நினைவிலிருத்திப் பாடுகிறான்.

மருதநிலத்தில் ஒரு காட்சி. பலவித மரங்களும், வண்ண மலர்க்கொடிகளும் நிறைந்ததொரு சோலை. நடுவண் அழகிய தடாகம் ஒன்று; நன்கு தெளிந்த நீர்நிலை; அதிலே சிறுசிறு அலைகள்; தாமரைக் கொடிகள் பெரிய பெரிய மலர்களை— மகிழ்ச்சி பொங்கும் மலர்ந்த முகத்தை ஒத்த தாமரை மலர்களை

—தாங்கி நிற்கின்றன. அப்பால் குவளைமலர்கள் பூத்து அருமையாகக் காட்சி தருகின்றன. கருமேகம் திரண்டு மயில்களுக்குக் களிப்பூட்டுகிறது. மேகம் 'உரும்' என ஒலிக்கிறது. அது கேட்டு மயில் தன் கலாபத்தை விரித்துக் கூத்தாடுகிறது. தாமரை முதலிய மலர்களில் உள்ள மதுவை உண்டு மயங்கி, அம் மயக்கத்திலே இனிமையான குரலிலே வண்டுகள் பண் இசைக்கின்றன.

இது ஒரு சாதாரண காட்சி; நாம் அடிக்கடி காணலாம். கண்டால் சிறிதுநேரம் அங்கு இருந்து சோலையின் குளுமையையும், காட்சிகளின் அழகையும் அனுபவித்து அப்பாற்சென்று விடுவோம். அதைப்பற்றிய எண்ணம் அப்புறம் எழாது; நமக்குச் சோலை வெறும் சோலையாகத்தான் தெரியும். அதற்கு மேல் நம் சிந்தனை ஓடாது.

ஆனால் கம்பன் அப்படியல்ல. அந்தக் காட்சியைக் கண்டான். அது அவன் மனத்தில் அப்படியே படிந்தது. அவ்வளவோடு நின்றுவிடாமல் மற்றொரு காட்சியை அது எழுப்பியது. அவன் கற்பனையில் இந்தக் காட்சி மற்றொன்றாக அவனுக்குத் தெரிந்தது. அந்தச் சோலை ஓர் ஆடலரங்காக மாறி நின்றது அவன் கருத்தில்.

மாநிலங் காக்கும் மன்னன் மகிழ்ச்சிபொங்கும் முகத்துடன் அரியணைமீது வீற்றிருக்கிறான். அவனுக்கு முன் எல்லா நலன்களும் நிரம்பிய நர்த்தனசாலையொன்று அமைக்கப்பட்டிருக்கிறது. திரைச்சீலை கட்டப்பட்டுள்ளது. அது, மெல்லியகாற்று வீசுவதால் அலைஅலையாக அசைந்தாடுகிறது. சுற்றிலும் கொடிகளைப் பழிக்கும் அழகுடைப் பெண்கள் தங்கள் தளிர்க்கரங்களில் ஏற்றிய விளக்குகளைத் தாங்கி நிற்கின்றனர். மெல்லிடையார் சிலர் நடுவிலே நடனமாடிக்கொண்டிருக்கின்றனர். அவர்கள் நாட்டியத்திற்கொப்ப ஒருபுறம் மத்தளங்கள் ஒலிக்கின்றன. இனிய தேனினைப்போன்ற மகரயாழில் ஒருபால் இன்னிசை எழுப்பிக்கொண்டிருந்தனர். இவ்வளவையும் அரசன் தன் மலர்க்கண்களை அகல விரித்து ஆச்சரியம் மேலிடப் பார்த்துக்கொண்டிருந்தான்.

இந்தக் காட்சிதான் அந்த மருதநில வளத்தைக் கண்ட கவிஞனின் உள்ளத்தில் உயிர்பெற்று எழுந்தது. உடனே கண்ட காட்சியையும், கருத்தில் உதித்த கற்பனையையும் கலந்து ஓர் ஓவியமாகத் தீட்டினான் கவிஞன். அதுவே தேமதுரத் தமிழ்மொழியில் பாடிய கம்பனது அழியாச் சொல்லோவியமாகத் திகழ்கிறது. இதோ அவன் பாட்டு:

" தண்டலை மயில்க ளாடத் தாமரை விளக்கந் தாங்க
கொண்டல் கண்முழவி னேங்கக் குவளைகண் விழித்து நோக்க
தெண்டிரை யெழினி காட்டத் தேம்பிழி மகர யாழின்
வண்டுக ளினிது பாட மருதம்வீற் றிருக்கு மாதோ."

அவனது இச் சொல்லோவியத்தில் மருதநிலம் அரசனாகத் திகழ்கிறது; இளமரச்சோலை ஆடலரங்காகக் காட்சியளிக்கிறது; மயில்கள் நாட்டியப் பெண்களாகத் தோன்றுகின்றன; தாமரைக் கொடிகளும் அதன் மலர்களும்தான் விளக்கேற்றி வைத்துக் கொண்டு நிற்கும் மங்கையர்; முகிற்குழாம் ஒலிக்கும் ஒலியே மத்தள ஒலி; தெள்ளிய நீர்நிலை திரைச்சீலை போன்றது; மது வுண்டு பாடும் வண்டின் மதுரகீதம்தான் மகரயாழின் இன்னிசை. நன்றாக மலர்ந்து விரிந்து நிற்கும் குவளைமலர்களே மருத அரசனின் கண்கள். இவ்வாறாக கம்பன் தன் கற்பனையின் சக்தி கொண்டு ஒப்பற்ற ஓவியம் ஒன்று தீட்டியிருக்கிறான். இது கவிஞருக்குரிய தனிப்பண்பு. இந்தத் திறமை கம்பனுக்கு நிறைய இருந்தது என்பதற்கு இது ஒன்றே தக்க சான்று.

---

## வாக்கின் வழிப்படுவ

[திருவையாறு, திரு. இரா. இராமாநுசம்]

மனமொழி மெய்களுள் வாக்கின் வழிப்படுவன, வாய்மையும் இனியவை கூறலும்; இவற்றின் தன்மையும், வேறுபாடும் உணர்தற் குரிய. வாய்மை என்பது, பொய்ம்மையை விலக்குவது. பொய்ம்மை என்பது காமமும், பொருளும்பற்றி நிகழும். எனவே, காமமும், பொருளும் விலக்கும் கூடாஒழுக்கம், கள்ளாமை எனும் அதிகாரங் களின் பின், வாய்மை வைக்கப்பட்டது. இனியவை கூறலென்பது, கடுஞ்சொல்லைக் கடிவது. கடுஞ்சொல் என்பது வெகுளியும், அறியாமை யும் பற்றி நிகழ்வது. இவை இரண்டிலுமுள்ள பொதுத்தன்மைகள், வாயின்கணிருந்து வெளிப்படுதலும், அறமுடைத்தாய் விளங்கலும், பிறருக்கு 'யாதொன்றும் தீமை இலாத'-'படிறில'வாய் விளங்கலுமாம். வாய்மையின் சிறப்புப் பண்பாவன, தீங்கு பயவா நிகழ்ந்தன கூறலும் நன்மை பயக்கும் நிகழாதன கூறலும்; இனியவை கூறலின் சிறப்புப் பண்பாவது, அகமும் முகமும் மலர, உள்ளத்து உவகையை வெளிப் படுத்திக் கூறலும் ஆம். இச் சிறப்புப் பண்புகளுள் ஒன்றன் தன்மை, மற்றொன்றுக்கு எவ்வாற்றானும் ஒவ்வாது. என்னை? வாய்மை கூறுவான் புக்குழி, அகமும் முகமும் மலர்ந்து கூறல் வேண்டுமெனும் வரை வின்மையானும், உள்ளம் உவந்து இனியவை கூறுங்கால் வாய்மைவழி நிற்றல் இயலாமையானும் என்க. இதுபற்றியே நாயனார் இனியவை கூறலை இல்லறவியலினும், வாய்மையை துறவறவியலினும் அமைத்தார்.

---

# வல்லப் பல்கலைக் கழகம்

பள்ளிப்படிப்பின் பின் பலதிறப்பட்ட சிறந்த அறிவை அளிக்கும் கல்லூரிகளும் பல்கலைக் கழகங்களும் பெரும்பாலும் நகர்களிலேயே அமைந்திருப்பதால் கிராமங்களில் வாழ்வோர்க்கும் கிராமத்திற்கும் முன்னேற்றம் ஏற்படுவதில்லை. கிராம முன்னேற்றத்திற்கு கிராமங்களில் பல்கலைக் கழகங்கள் நிறுவப் பெறுதல் வேண்டும் என்று 'இரும்பு மனிதர்' என்று போற்றப் படும் திரு. வல்லபாய் படேல் தம் கருத்தைத் திரு. பைலால் பாய் படேலிடம் கூறினார். இத்தகைய அரிய நோக்கத்துடன் பைலால்பாய் படேல் ஆனந்த் என்ற ஊருக்கு ஐந்து கல் தொலைவில் உள்ள கிராமத்தில் பல்கலைக் கழகம் ஒன்றை நிறுவ முற்பட்டார். அவர் சாருடார் கல்விக் குழு தலைவராய பின்னர் குழுவின் முயற்சியுடன் தம் நோக்கத்தை இணைத்தார்.

கல்லூரிகள் கட்டுவதற்கு 150 ஏக்கர் நிலத்தை அன்பளிப்பாகக் கிராம மக்களிடம் கேட்டனர். மக்கள் மனமுவந்து 600 ஏக்கர் நிலத்தை அளித்தனர். அதில் 300 ஏக்கர் நிலத்தைக் கட்டிடங்களுக்குப் பயன்படுத்திக்கொண்டு மற்றவற்றை நில உரிமையாளர்க்கே திருப்பி அளித்துவிட்டனர். 1947-ஆம் ஆண்டு சனவரி 15-ஆம் நாள் கட்டிடம் கட்டத் துவங்கி அவ்வாண்டே சூன் திங்களில் கல்லூரியைத் துவங்கி விட்டனர்.

1947-இலிருந்து ஒன்பதாண்டுகளில் அக் கல்லூரி பெருகி இன்று ஒரு பல்கலைக் கழகமாக மாறிவிட்டது. இன்று கலை, அறிவியல், வணிகம், பொறியியல் இவற்றைக் கற்பிக்கத் தனித் தனிக் கல்லூரிகள் உள்ளன. மருத்துவக் கல்லூரியையும் வெ[illegible] விரைவில் துவங்கிட முடிவு செய்துள்ளனர். இவ்வளவு பெ[illegible] பணியைத் திரு. பைலால்பாய் படேல் அரசினரின் பொருளுத[illegible] யின்றியே முடித்துள்ளார். கல்லூரிக் கட்டிடங்கள், மாணவர் தங்கும் விடுதிகள், மற்றும் கட்டிடங்கள் அனைத்தும் மாணவர்களாலேயே கட்டப்பட்டவை. இன்று அந்தப் பல்கலைக் கழகத்திற்குத் தேவையான பொருள் அனைத்தும், மாணவர்கட்கு வேண்டிய ஆடை உட்பட, அங்கேயே தயாரிக்கப்படுகின்றன.

மூவாயிரத்திற்கு மேற்பட்ட மாணவர்கள் படிக்கும் இப் பல்கலைக் கழகத்தை நிறுவிய பெருமை பைலால்பாய் படேல் ஒருவரையே சாரும். ஒன்பதே ஆண்டுகளில் பல்கலைக் கழகம் நிறுவவேண்டும் என்ற அவர் அவா முற்றுப்பெற்றது. அண்மையில் அவர் எழுபதாம் ஆண்டு நிறைவு விழா சிறப்பாக நடைபெற்றது. நாட்டு முன்னேற்றத்திற்காகத் தன் ஓய்வுநாள் முழுமையையும் செலவழிக்கும் அவர் தொண்டு பாராட்டற்குரியது.

---

ஓம்

# "மறைமலையடிகள் நூல்நிலையத் துவக்கவிழா"

## அறிவிப்பு

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தில், அறநிலையங்களுள் ஒன்றாகிய தென்னிந்திய சைவ சித்தாந்த சங்கத்தின் ஆதரவில், சென்னை இலிங்கிச் செட்டித் தெரு, 105 ஆம் எண் கட்டடத்தில் வள்ளுவராண்டு ௧௯௮௯ ஆவணி ௮-ம் நாள் (24-8-1958) ஞாயிறு காலை 9 மணிக்கு,

**மறைமலையடிகள் நூல் நிலையத்தைச்**

சென்னை மாநில ஆளுநர்

**மாண்பமை விட்ணுராம் மேதி யவர்கள் தலைமையில்**

சென்னை உள்நாட்டமைச்சர்

**உயர்திரு எம். பக்தவத்சலம் அவர்கள்**

திறந்துவைப்பார்கள்.

**பத்ம ஸ்ரீ எஸ். ஆர். அரங்கநாதன் அவர்கள்**

"நூல்நிலையத் தொண்டு" என்னும் பொருள் பற்றிச் சொற்பொழிவாற்றுவார்கள்.

---

மாலை 5 மணிக்குத்

திருவார்திரு. தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாசாரிய சுவாமிகள் (திருவண்ணாமலை யாதீனத் தலைவர், குன்றக்குடி) தலைமை பூண்பார்கள்.

அவரவர்கள் முன்னுரையுடன் மறைமலையடிகளார் படத்தினையும் திறந்துவைப்பார்கள்.

பின்பு திரு. சோமசுந்தரநாயக ரவர்கள், பேராசிரியர் சுந்தரம் பிள்ளை யவர்கள், கழக அமைச்சர் வ. திருவரங்கனார் ஆகிய மூவரின் படங்களை முறையே பேராசிரியர் இளவழகனார் அவர்கள், டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை யவர்கள், சைவப் பாதிரியார் சச்சிதானந்தம் பிள்ளை யவர்கள் திறந்துவைப்பார்கள்.

மறைமலையடிகளாரின் மாண்பு பற்றிப் பின்வரும் சான்றோர்கள் சொற்பொழிவாற்றுவார்கள் :

சென்னை முன்னாள் மேயர், உயர்திரு டி. செங்கல்வராய னவர்கள், உயர்திரு ம. பொ. சிவஞான கிராமணியாரவர்கள், திருவாட்டி சவுந்தரம் கைலாசம் அவர்கள், அறிஞர் சி. என். அண்ணாத்துரை யவர்கள், எம்.எல்.ஏ.

---

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) இந்திமொழி பேசுவோர்க்கு குடியரசுத் தலைவர் அறிவுரை

"இந்தி பேசுபவர்கள் இந்தி இலக்கியத்தையும் மொழியை வளம் படுத்துவதில் பரந்த உள்ளப் பாங்கினைப் பெறவேண்டும். இந்தி பேசாத மக்களை வெறுக்காமல் அவர்கள் இந்திமொழியையும் இலக்கியத்தையும் கற்க ஆக்கமளிக்கவேண்டும்; தமிழ்நாட்டில் இந்திக்குப் பலத்த எதிர்ப்பு இருந்தபோதிலும் அங்கு அதைப் பரப்புவதற்கு ஆதரவு அளிக்கப்படுகிறது" என்று 'அகில இந்திய ராஷ்டிரபாஷை பிரசார சமிதி'யின் எட்டாம் ஆண்டு மாநாட்டில் பேசிய இந்தியக் குடியரசுத் தலைவர் திரு. இராசேந்திர பிரசாது அவர்கள் பேசியுள்ளார்கள்.

குறிப்பு: இந்தியைத் தமிழர்கள் எதிர்ப்பதற்குக் காரணம், இந்தி மொழி வாயிலாகத் தமிழகத்தின்மீது இந்திவெறியர்களின் அரசியல் ஆதிக்கம் செலுத்தப்படும் என்ற அச்சமேயாகும். இதற்கு ஏற்றாற் போல் பல நிகழ்ச்சிகளை நாம் நடைமுறையில் கண்டுவருகிறோம். இந்நிலையில் குடியரசுத் தலைவரின் அறிவுரை வடவரின் செவியில் புகுமா?

## (உ) ஆட்சிமொழிக் குழு அறிக்கையில் காணும் சில புள்ளி விவரங்கள்

(1) நாட்டில் பெரும் அளவில் பேசப்படும் 14 மொழிகளில் இந்தியும் ஒன்று.

(2) இந்திமொழி மூன்று மாநிலங்களில் மட்டும்தான் பேசப் படுகிறது. அதிலும் 11 பிரிவுகள் உள்ளன.

(3) பஞ்சாபி, உருது, இந்துஸ்தானி ஆகிய மொழிகளை இந்தி மொழி என்று கருதாவிட்டால் இந்திமொழி பேசுபவர்களின் தொகை 11 கோடிதான்.

(4) நான்கு திராவிட மொழிகளைப் பேசும் தென்னாட்டு மக்களின் தொகைமட்டும் ஏறக்குறைய 10 கோடியாகும்.

(5) இந்தி இலக்கியமும் சொல்வளமும் இன்னும் போதிய அளவு வளர்ச்சியடையவில்லை. தற்கால நிலைமைகளுக்கு அந்த மொழி சிறிதும் பொருத்தமற்றதாகும்.

## (ங) தமிழர் திருமண மண்டப நிதிக்கு உதவி

சென்னையில் கட்டப்படவிருக்கும் 'தமிழர் திருமண மண்டப'த்திற்கு நிதி திரட்டும் பொருட்டு, 3-8-58 மாலை தேனாம்பேட்டை காங்கிரஸ் திறந்தவெளி அரங்கில் திரு. சிவாஜி கணேசனின் 'வீரபாண்டிய கட்டபொம்மன்' நாடகம் சைவ வேளாளர் பேரவையின் சார்பில் நடைபெற்றது. பேரவையின் தலைவர் திரு. டி. எஸ். பழனி ப பிள்ளை வரவேற்றார். சட்டமன்ற எதிர்க்கட்சித் தலைவர் திரு. கே. ராமசாமி முதலியார் நாடகத்திற்குத் தலைமை தாங்கிப் பாராட்டினார். திரு. சிவாஜி கணேசனைப் பாராட்டி திரு. புத்தனேரித் சுப்பிரமணியம் 'இணையில்லாத நடிகர்' என்ற ஒரு கவிதையைப் படித்து வழங்கினார். திரு. சிவாஜி கணேசன் நன்றி கூறுகையில் திருமண மண்டப நிதிக்கு ரூ. 201-00 நன்கொடை வழங்குவதாக அறிவித்தார்.

---

# மதிப்புரை

**" இராசராசேச்சுரமும் பிற சோழர் கோயில்களும் "**

[இதன் ஆசிரியர் திரு. ஜே. எம். சோமசுந்தரம் பிள்ளை, பி பி.எல். அவர்களாவர். இவ்வெளியீடு தஞ்சாவூர் அரண்மனைத் தே தானத்தாரால் வெளியிடப்பெற்றது. இதன் விலை ரூபா 2-00.]

இந்நூலின் ஆசிரியர் முன்னாள் தஞ்சை அரசர் திருக்கோ கண்காணிப்பாளராகப் பணிபுரிந்த பண்பாளர். இதுபோல் திருப்பழ திருச்செந்தூர் முதலிய திருக்கோயிற் கண்காணிப்புப் பணிக புரிந்துள்ளார். இப்பொழுது "அண்ணாமலைப் பல்கலைக் கழகத்த பயனுர் பணிபுரிந்துவருகின்றார்கள். அவர்களால் இதுபோல் பலதி கோயில்கள் வரலாறுகளும் பிறவும் செம்மையுற வெளியிட்டுள்ளார்க அவற்றின் விளக்கங்கள் முழுவதும் இதன்கண் காணலாம்.

இதன்கண் 'இராசராசேச்சுரமும் பிற சோழர் கோயில்களு சோழர் வமிசச்சமயப்பணி' முதலாகச் 'சோழர் காலத்துச் சுவரோவி யங்கள்' ஈறாகப் பதின்மூன்று தலைப்புக்கள் காணப்படுகின்றன. வொன்றனையும் வரலாற்றுச்சான்றுகள், கல்லெழுத்துச் செப்புப் முதலிய சான்றுகள், நூற்சான்றுகள் முதலியன கொண்டு கா யுடன் நன்கு விளக்கியுள்ளார்கள். அழகிய கண்கவர் ஓவியங்க காணப்படுகின்றன. அவைகள் அனைத்தும் வரலாறுகளை வி ப் பெருந்துணை புரியும் பெற்றியன.

இந்நூல் வரலாற்றின் வாய்மையுணர்வோர்க்கும், திருக்கோயி சிறப்புணர்வோர்க்கும், திருமுறைப் பெருமை தெளிந்து கைக்கொண் ஓதியுய்ய நினைவோர்க்கும், பண்டை மறமன்னர்களின் அறமுறை ஆண்மை, ஆண்டவன் அன்பு, அவர்தம் திருக்கோயிற்றிருப்பணிகள் அவர்தம் மாதேவிமார், படைத்தலைவர், பேரன்பினர் முதலியோர் செ துள்ள திருக்கோயிற்றிருப்பணிகளை ஆராய முன்வருவோர்க்கும் வழ காட்டும் நந்தாமணிவிளக்காகும். திருக்கோவில் வழிபாட்டினர் திரு கோவிற் பெருமை ஒன்றும் உணராது வெறும் வழிபாட்டுடன் அமைந் விடுவதால் செந்நெறி மாண்பினைச் சிறப்புறக் காண்டற்கும், பிறர் வினவி குத் தக்கவாறு விடை இறுத்தற்கும் அதன்வாயிலாகச் சமயவுண்மைகளைப் பெருக்கற்கும் இயலாதவராகின்றனர். இஃது அவர்கட்குச் சமயத்தை உணரவும் வளர்க்கவும் பெருந்துணைபுரியும் இயல்பினது. இதனைப் பெருமக்களும், மாணவர்களும், ஆசிரியர்களும் வாங்கிக் கற்றுப் போற்று வார்களாக.



திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : வ. சுப்பையா.